# நாளுக்கு நாள்
# அதிக தெளிவுள்ள
# அழகான சருமம்

ரெக்ஸோனா சோப்பை தினமும்
உபயோகியுங்கள். இதில் அடங்கி
யிருக்கும் 'கேடில்' உங்கள் சரு
மத்திற்கு புது ஆரோக்கியமும்
தெளிவும் தரும்.




**ரெக்ஸோனா**

**'கேடில்'*** கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்தை மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர் இது.

RP. 73-X30 TM

ரெக்ஸோனா ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரிக்கப்பட்டது



# கல்கி பொருளடக்கம்


மலர் 11 இதழ் 21 | 1951 டிசம்பர் 23 | கர மார்கழி 8




''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


தி இந்தியன் பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடி, மதராஸ். (ரிஜிஸ்டர்டு)

## சங்கீதத் திருவிழா: கோகலே ஹாலில்

மகாநாட்டுத் தலைவர்: சங்கீத ரத்னாகர, காயக சிகாமணி அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்கள்
கனம் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கட்ராமய்யர் அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைப்பார்கள்

கச்சேரி விவரம் D. V.

1. ஞாயிறு (23-12-51) மாலை 5-30க்கு
எம். எல். வஸந்த குமாரி — பாட்டு
2. திங்கள் (24-12-51) மாலை 6-க்கு
நடராஜ்-சகுந்தலா (லலிதா இந்திய நடனங்கள்)
3. செவ்வாய் (25-12-51) மாலை 6-க்கு
வைஜயந்திமாலா — பரத நாட்டியம்
4. புதன் (26-12-51) மாலை 5-30க்கு
அரியக்குடி ராமானுஜ அய்யங்கார்-பாட்டு
5. வியாழன் (27-12-51) மாலை 5-30க்கு
பி. எஸ். வீருசாமி பிள்ளை - நாதஸ்வரம்
6. வெள்ளி (28-12-51) மாலை 5-30க்கு
எம். எஸ். சுப்புலக்ஷ்மி — பாட்டு
7. சனி (29-12-51) மாலை 5-30க்கு
வி. வி. சடகோபன் பி. ஏ. — பாட்டு
8. ஞாயிறு (30-12-51) மாலை 6-க்கு
குமாரி கமலா — பரத நாட்டியம்
9. திங்கள் (31-12-51) மாலை 5-30க்கு
மதுரை மணி அய்யர் — பாட்டு
10. செவ்வாய் (1-1-52) மாலை 6-க்கு
வைஜயந்திமாலா
சித்ரம்பலக் குறவஞ்சி — நாட்டிய நாடகம்

சீஸன் டிக்கட்டுகள்: ஸ்பெஷல் சீட்டு: ரூ. 50. ரிஸர்வ்டு: ரூ. 35. 1-ம் வகுப்பு ரூ. 25. 2-ம் வகுப்பு ரூ. 15/-
தினசரி டிக்கெட்டு விவரம்: கச்சேரிகள் நீ. 1, 4, 5, 7 & 9 — ரூ. 5, 3, 2 & 1.
.. .. 2, 3, 6, 8 & 10 — ரூ. 10, 5, 3 & 1-8.

டிக்கட்டுகள் கிடைக்குமிடம்: 1. ஸொஸைடி ஆபீஸ், கோகலே ஹால், ஜி. டி. மதராஸ் (போன்: 3254) 2. ஸ்ரீ எஸ். கே. சுந்தரராமய்யர், பி. ஏ., 464, தங்கசாலை வீதி, சௌகார் பேட்டை (போன்: 3433) 3. மெஸர்ஸ். ஜெ. எப். வெட்டாரீஸ், 180, மௌண்ட் ரோடு, மதராஸ் (போன்: 86665) 4. ஸ்ரீ சாயிமாணவனா ஸ்டோர்ஸ், 25, தியாகராய ரோடு, தியாகராயநகர் (போன்: 88029) மயிலாப்பூர் பார்மஸி, லஸ், மயிலாப்பூர் (போன்: 86076)

# யார் வேண்டும்?



"இந்திய தேசத்தின் தலைமைக்கு நேருஜியைப் போல் தகுதிவாய்ந்தவர் யாரும் இல்லை. ஆகையால் பொதுத் தேர்தலில் காங்கிரஸுக்கே தம்முடைய வோட்டு" என்று இந்தியப் பொது மக்கள் ஆங்காங்கு தீர்ப்புச் சொல்லி வருகிறார்கள்.



கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 21

# நமக்கு என்ன லாபம்?

நெடுங்காலமாக ஒரு குடும்பத்தில் குழந்தையில்லாமலிருந்தது. வீடு வெறிச்சிட்டுக் கிடந்தது. புருஷனும் மனைவியும் பல நோன்புகள் நோற்றார்கள்; விரதம் இருந்தார்கள்; தவம் செய்தார்கள். கடைசியாக ஒரு குழந்தை பிறந்தது. அன்புடன் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார்கள்.

அந்த இல்லறத்தானைப் பார்ப்பதற்கு ஒருவன் வந்தான். குழந்தையை வைத்துக் கொஞ்சிக் கொண்டிருப்பதைக் கவனித்தான். குழந்தை முகமலர்ந்து சிரித்தது. "பார்த்தீர்களா, ஐயா! குழந்தை எவ்வளவு அழகாய்ச் சிரிக்கிறது! இரண்டு பல் கூட முளைத்து விட்டது!" என்று தகப்பன் பூரித்தான். குழந்தை அழுதது. "ஐயையோ! குழந்தைக்குப் பசி போலிருக்கிறது! இன்னும் பால் கொடுக்க வில்லையே? யார் அங்கே?" என்று கேட்டுக் கொண்டு மனைவியைத் தேடி ஓடினான். குழந்தையின் அழுகை நின்றது. இவனுக்கும் மனம் சமாதானம் ஆயிற்று.

குழந்தையின் தகப்பனைப் பார்க்க வந்த மனிதன், "ஐயா! இந்தக் குழந்தையை வைத்துக் கொண்டு இவ்வளவு கூத்தாடுகிறீர்களே! இந்தக் குழந்தையினால் உமக்கு என்ன லாபம்?" என்று கேட்டான். கேள்வி கேட்டவனைப் பார்த்துக் கிரகஸ்தன் "முட்டாளே! நீ முதலில் வெளியே போ!" என்றான். சுவரில் சாத்தியிருந்த தடியை எடுத்துக் காட்டினான். வந்த மனிதன் எதற்காக வந்தானோ, அதைச் சொல்லாமலே ஓடும்படியாயிற்று.

"சுதந்திரம் வந்து விட்டது என்று குதூகலப்படுகிறீர்களே? வந்த சுதந்திரத்தினால் நமக்கு என்ன லாபம்?" என்று கேட்கும் சில பிரகஸ்பதிகள் நமது நாட்டில் இருக்கிறார்கள். நியாயமாக இவர்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருக்க வேண்டியது. தவறுதலாக வெளியில் இருக்கிறார்கள். இருக்கத்தான் இருக்கிறார்களே, வாயை மூடிக்கொண்டு சும்மா இருக்கக் கூடாதா? இந்தப் பொதுத் தேர்தலில் வந்து புகுந்து மேற்படி அசட்டுக் கேள்வியைக் கேட்டுத் தொல்லை செய்கிறார்கள். பைத்தியக்காரனைச் சுற்றிப் பத்து பேர் என்ற பழமொழிப்படி இவர்களைச் சுற்றிச் சிலர் சேர்ந்து விடுவதால் போக்கு வரவுக்குத் தடையாகிறது.

சுதந்திரம் அடைந்ததினால் நாம் அடைந்த லாபம் சுதந்திரந்தான். சுதந்திரத்தைக் காட்டிலும் நாம் அடையக்கூடிய வேறு பெரிய லாபம் என்ன? அன்னியரின் கீழ் அடிமைப் பட்டிருந்தவர்களுக்கு விடுதலையைப் போன்ற மகத்தான லாபம் வேறு ஒன்று உண்டா?

"மானம் அழிந்த பின் வாழாமை முன்னினிது" என்பது பழந்தமிழரின் பண்பாடு. நூற்றைம்பது வருஷமான அன்னிய ஆங்கிலேயரின் கீழ் அடிமைகளாய் வாழ்ந்திருந்தோம். அடிமை வாழ்வைக் காட்டிலும் மானமிழந்த வாழ்வு வேறு இருக்க முடியுமா? முடியாது! அப்படிப் பட்ட மானமிழந்த அடிமை வாழ்வை ஒழித்து இன்று சுதந்திர இந்தியாவின் சுதந்திரக் குடிகளா யிருக்கிறோம். இதைக் காட்டிலும் பெரிய லாபம் வேறு உண்டா?

"வீர சுதந்திரம் வேண்டி நின்றார் பின்னர்
வேறொன்று கொள்வாரோ?" என்றார் பாரதியார்.

"மண்ணிலின்பங்களை வேண்டிச் சுதந்திரத்தின்
மாண்பினை இழப்பாரோ?" என்றார் அம் மகாகவி.

சுதந்திரத்தைத் தராசின் ஒரு தட்டில் போட்டு அதற்கு இணையாக வேறு எந்தப் பொருளையும் இன்னொரு தட்டில் போட்டு நிறுக்க முடியாது. பொன்னை ஒரு தட்டில் போட்டு வெறும் பதரை இன்னொரு தட்டில் போட்டு நிறுப்பது பைத்தியக்காரத்தனம் அல்லவா? ஆகையினால் தான் நம் தேச மகாகவி "சுதந்திரமில்லாத

நாட்டு மக்கள் நிகரிலாச் செல்வமும் வேறு பல நலன்களும் படைத்திருந்த போதிலும் அவர்கள்

"அணிகள் வேய் பிணந்தோடொப்பார் !"

என்று சாபமிட்டுக் கூறினர்.

1947-ம் வருஷத்துக்கு முன்னால் இந்நாட்டு மக்களாகிய நாம் சுதந்திரமில்லாத நடைப் பிணங்களா யிருந்தோம்; இப்போது சுதந்திரம் பெற்ற மனிதர்களாய் வாழ்கிறோம். இதைக் காட்டிலும் ஒரு லாபம், ஒரு நலன் இருக்க முடியுமா !

இத்தகைய ஒப்பற்ற லாபமும் விலைமதிப்பில்லாச் செல்வமுமான அரசியல் சுதந்திரத்தை நமக்கு அளித்தது காங்கிரஸ் மகா சபை. இதை நாம் மறக்க முடியாது; நாம் மறந்தாலும் நம் சந்ததிகள் மறக்க மாட்டார்கள்; சரித்திரம் ஒரு நாளும் இதை மறவாது.

* * *

சுதந்திரம் கிடைத்திருப்பது சரிதான்; ஆனால் சுதந்திரம் கிடைத்து விட்டது என்பதை மக்கள் உணருவதற்கு ஒரு சந்தர்ப்பம் வாய்க்கவில்லையே! —ஆம்; இது உண்மைதான். நமது நாட்டில் 100க்கு 90 பேரை இங்கிலீஷ் அரசாங்கம் படிப்பில்லாமல் வைத்துவிட்டது. ஆகையால் நாட்டு நடப்பு அவர்களுக்குத் தெரியாது. இங்கிலீஷ்காரன் கப்பலேறிப் போய்விட்டான் என்பதையே பலர் உணர்ந்து கொள்ளவில்லை. காந்திமகாத்மாவின் ஆத்மசக்தியினால் நமக்குச் சுலபமாகவே சுதந்திரம் கிடைத்துவிட்டது. இங்கிலீஷ்காரன் சுதந்திரத்தைக் கொடுத்தபோது அவன் நீடும் வேலை செய்த அதிகார வர்க்கத்தையும் அப்படியே கொடுத்துவிட்டுப் போய் விட்டான். அதனால் சுதந்திர சூரியனின் உதயத்தைப் பலர் கவனிக்கத் தவறி விட்டார்கள்.

இது ஒரு குறைதான். இந்தக் குறையை நிவர்த்திப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் இப்போது வாய்த்திருக்கிறது. அதுதான் பொதுத் தேர்தல்; உலக சரித்திரம் காணாத பொதுத் தேர்தல்; பதினேழு கோடி மக்கள் உரிமையுடன் ஈடுபடக் கூடிய பொதுத் தேர்தல்.

"சுதந்திரம் நமக்கு என்ன தந்தது !" என்று கேட்பவர்களுக்கு இப்போது பதில் கூறலாம்.

சுதந்திரம் நம் ஒவ்வொருவருக்கும் வாக்குரிமை தந்திருக்கிறது. இந்த நாட்டை ஆளும் உரிமை அளித்திருக்கிறது. ஏழை—பணக்காரன், முதலாளி—தொழிலாளி, ஆண்—பெண், எஜமான்—சேவகன், பட்டதாரி—படிக்காதவன், பண்ணையார்—பண்ணை ஆள், ரிக்ஷா இழுப்பவன்—ரிக்ஷாவில் ஏறுகிறவன்,—என்னும் வேற்றுமைகள் இன்றி, வயது வந்தவர்கள் எல்லாருக்கும் சமதர்ம வாக்குரிமை அளித்திருக்கிறது.

இந்தப் பொதுத் தேர்தலில் நாம் ஒவ்வொருவரும் நம் வாக்குரிமையை உபயோகிக்கலாம். இந்த தேசத்தின் அரசாங்கத்தை யார் நடத்த வேண்டும் என்று தீர்ப்பு அளிக்கலாம். "நேருஜி வேண்டுமா ! வேறுஜி வேண்டுமா !" என்று முடிவு செய்யலாம். "காங்கிரஸ் வேண்டுமா ! காங்கிரஸ் எதிரிகளும் உதிரிகளும் வேண்டுமா !" என்று தீர்மானிக்கலாம்.

அவ்விதம் வோட்டுக் கொடுத்துத் தீர்ப்பு அளிப்பதின் மூலம் "நாம் எல்லாரும் இந்நாட்டு மன்னர்" என்பதை ஸ்தாபிக்கலாம்.

இத்தகைய தீர்ப்புச் சொல்லக்கூடிய சர்வஜன சமதர்ம வாக்குரிமையை நமக்கு அளித்திருப்பதும் காங்கிரஸ் ஸ்தாபனந்தான்; பாரத நாட்டுக்குச் சுதந்திரத்தைத் தேடிக் கொடுத்த அதே காங்கிரஸ் மகா சபைதான்.

* * *

இங்கிலீஷ்காரன் இந் நாட்டை விட்டுப் போனபோது அரசாங்கத்தைக் காங்கிரஸ்காரர்களின் கையில்தான் ஒப்புவித்து விட்டுப்போனான். தன்னிடம் சரணாகதியா யிருந்தவர்களிடம் ஒப்புவிக்க வில்லை. காங்கிரஸ்தான் மக்களின் நம்பிக்கையைப் பெற்ற பிரதிநிதி சபை என்று உணர்ந்து, வேறு வழியின்றி, காங்கிரஸ் தலைவர்களிடம் இந்திய அரசாங்கத்தை ஒப்புவித்தான். நிபந்தனை ஒன்றும் போடாமல் ஒப்புவித்தான். காங்கிரஸ் தலைவர்கள் தங்கள் பெரிய மனது காரணமாக மற்றக் கட்சிப் பிரமுகர்கள் சிலரையும் சேர்த்துக் கொண்டு சர்க்காரை நடத்தி வந்தார்கள். இப்படியே இன்னும் வெகுகாலம் அவர்கள் அரசாங்கத்தை நடத்திக்கொண்டு போகலாம். இவ்வளவு அவசரமாக அரசியல் நிர்ணய சபை கூட்டிப் புதிய அரசியல் திட்டம் தயாரித்திருக்க வேண்டியதில்லை. இவ்வளவு சீக்கிரத்தில் பொதுத் தேர்தல் வைத்திருக்க வேண்டியதுமில்லை. தள்ளிப் போட்டுக் கொண்டே போவதற்கு எத்தனையோ காரணங்கள் இருந்தன. காங்கிரஸ் வாதிகள் அரசாங்கம் ஏற்ற உடனே ஒரு கோடி அகதிகள் வீடு வாசலிழந்து, நிலபுல மிழந்து, சொத்து உடைமை இழந்து, பாகிஸ்தானிலிருந்து பரதேசியாக இந்தியாவுக்கு வந்தார்கள். அவ்வளவு பேரையும் வருஷக் கணக்கில் வைத்து ரட்சித்து, அவர்களுக்குத் தங்க இடமும் உடுக்க உடையும் உண்ண உணவும் கொடுத்து, முடிவில் ஜீவனத்துக்கு வழியும் தேடிக் கொடுக்கவேண்டி இருந்தது. பாகிஸ்தான்—பர்மா பிரிவினையினால் உணவுப் பொருளில் பற்றாக்குறை ஏற்பட்டது. நாலு வருஷ மழை இன்மையால் பற்றாக்குறை அதிகமாயிற்று. இந்தியாவின் ராணுவப் பாதுகாப்புக்குக் கேந்திர ஸ்தானமான காஷ்மீரைப் பாகிஸ்தான் விழுங்கிவிடப் பார்த்தது. இன்னும் அந்தகராறு தீரவில்லை. நாலு மாதத்துக்கு முன்னால் கூட, லியாகத் அலிகான் (பாவம் !) கைமுஷ்டியைத் தூக்கிக் காட்டி யுத்த கர்ஜனை செய்தார் ! இது போன்ற பல முக்கியமான காரணங்களைச் சொல்லிக் காங்கிரஸ் பொதுத் தேர்தலைத் தள்ளிப் போட்டுக் கொண்டே போகலாம். அப்படித் தள்ளிப் போடவில்லை. இந்தியா சுதந்திரம் பெற்றபோதுதான் பாகிஸ்தானும் பெற்றது. அங்கேயும் அரசியல் நிர்ணய சபை ஏற்பட்டது. ஆனால் அரசியல் திட்டம் அங்கே தயாராகவில்லை. பொதுத் தேர்தலைப்பற்றிய பேச்சே பாகிஸ்தானில் இன்று வரையில் கிடையாது.

ஆனால் நம் ஒப்பற்ற காங்கிரஸ் தலைவர்கள் தேசத்துக்குச் சுதந்திரம் தேடினார்களேயன்றித் தங்களுக்கு அதிகாரம் தேடவில்லை.

ஆகையால் எத்தனையோ தொல்லைகளுக்கிடையில் புதிய அரசியல் திட்டத்தைத் தயாரித்தார்கள். சர்வஜன வாக்குரிமையும் கொடுத்தார்கள். பொதுத் தேர்தலும் நடத்துகிறார்கள்.

இந்தத் தேர்தலும் இதில் நம் எல்லோருக்கும் கிடைத்திருக்கும் வாக்குரிமையும் காங்கிரஸ் மகா சபையினால் கிடைத்தவை என்பதை நாம் ஒரு நாளும் மறந்துவிட முடியாது. நாம் மறந்தாலும் சரித்திரம் அதை மறந்து விடாது.

# காங்கிரஸ் ஆதிசேஷன்

சுதந்திரம் காங்கிரஸினால் கிடைத்தது; வாக்குரிமையும் காங்கிரஸினால் கிடைத்தது:—இவை மறுக்க முடியாத உண்மைகள். இந்தக் காரணங்களுக்காக நாம் காங்கிரஸுக்குத்தான் வோட்டுக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. காங்கிரஸைக் காட்டிலும் நல்ல தொண்டு செய்யக் கூடிய ஸ்தாபனங்கள்,—தேசத்தை முன்னேற்றக் கூடிய ஸ்தாபனங்கள்—இத் தேர்தலில் போட்டியிட்டால், அந்த ஸ்தாபனங்களுக்கு வோட்டுக் கொடுக்கலாம். வாக்குரிமை பெற்றதன் பயனே அதுதான்; அதாவது நம் விருப்பத்தின்படி வோட்டுக் கொடுப்பதுதான். வேறு கட்சிகள் காங்கிரஸைவிட நல்ல திட்டங்களை வெளியிட்டால், அத் திட்டங்களை அவை நிறைவேற்றும் என்ற நம்பிக்கையும் நமக்கு இருந்தால், அக்கட்சிகளுக்கு நம் வோட்டைப் போடலாம்.

அத்தகைய நம்பிக்கை நமக்கு ஏற்படாத வரையில் தேசத்துக்குச் சுதந்திரமும் மக்களுக்கு வாக்குரிமையும் அளித்த காங்கிரஸுக்கு வோட்டுப் போடுவதுதான் முறையாகும்.

ஆனால் இத் தேர்தலில் காங்கிரஸை எதிர்ப்பவர்களில் பலர் கட்சி, திட்டம் எதையும் கவனியாமல் எப்படியாவது "காங்கிரஸை ஒழிக்க வேண்டும்" "காங்கிரஸைக் குழி தோண்டிப் புதைக்க வேண்டும்" என்ற ரீதியில் பிரசாரம்செய்து வருகிறார்கள்.

திராவிடக் கட்சியார் தேர்தலில் யாரையும் அபேட்சகராக நிறுத்தி வைக்கவில்லை. திட்டம் எதுவும் வகுத்து வாக்காளர்முன் வைத்து "எங்கள் கட்சிக்கும் திட்டத்துக்கும் வோட்டுக் கொடுங்கள்" என்று கேட்கவில்லை. ஆனால் காங்கிரஸை எதிர்ப்பவர்கள் யாராயிருந்தாலும் அவர்களை ஆதரித்துக் காங்கிரஸை ஒழிக்க வேண்டும் என்று பிரசாரம் செய்கிறார்கள்.

"**கிடைத்த தடியைக் கொண்டு காங்கிரஸ் பாம்பைக் கொல்லு**" என்ற அபூர்வமான உபதேசத்தைக் கொட்டை எழுத்துத் தலைப்புகளில் திராவிடக் கட்சித் தலைவர் வெளியிட்டிருக்கிறார்.

இந்தக் கட்சியுடனே பொது உடைமைக் கட்சியார் சேர்ந்திருக்கிறார்கள். திராவிடக் கட்சி பொது உடைமைக் கட்சி அபேட்சகர்களை ஆதரிக்கிறது.

முஸ்லிம் லீகர்களும் இதே முறையைக் கைப்பற்றிக் காங்கிரஸை எதிர்க்கும் அபேட்சகர்கள் யாராயிருந்தாலும் அவர்களுக்குத் தங்கள் மேலான ஆதரவை அளித்து வருகிறார்கள்! முஸ்லிம் அபேட்சகர்களை மட்டுமன்றிப் பல இடங்களில் ஹிந்து அபேட்சகர்களையும் முஸ்லிம் லீக் ஆதரித்திருக்கிறது.

இம்மாதிரியே சில இடங்களில் காங்கிரஸை எதிர்க்கும் சுயேச்சை அபேட்சகர்களைத் திராவிடக் கழகத்தாரும் கம்யூனிஸ்டுகளும் முஸ்லிம் லீகர்களும் ஹிந்து சாம்ராஜ்ய வீரர்களும் கூடச் சேர்ந்து ஆதரிக்கிறார்கள்.

இவர்கள் எல்லாருடைய நோக்கமும் ஒன்றுதான் என்று நிச்சயமாகிறது. அதாவது திராவிடக் கட்சித் தலைவர் பச்சைத் தமிழில் வெளியிட்டிருக்கிறபடி "**கிடைத்த தடியைக் கொண்டு காங்கிரஸ் பாம்பைக் கொல்லு!**" என்பதுதான்.

அப்படி இவ்வளவு மாறுபட்ட கொள்கையினரும் காங்கிரஸைத் துவேஷிக்கும்படியாகக் காங்கிரஸ் என்ன செய்திருக்கிறது என்பதைப் பொது மக்கள் யோசிக்க வேண்டும்.

இவர்கள் எல்லாருக்கும் கோப மூட்டும்படியாகக் காங்கிரஸ் செய்திருப்பது இந்தப் பாரத நாட்டுக்குச் சுதந்திரம் தேடித் தந்திருப்பதுதான்.

திராவிடக் கழகத்தார் இந்தியா தேசம் சுதந்திரம் பெற்ற அன்று கறுப்புக் கொடி ஏற்றித் துக்கம் கொண்டாடியவர்கள்.

முஸ்லிம் லீகர்கள் எப்போதும் தேச சுதந்திரப் போருக்கு விரோதமாக முட்டுக்கட்டைபோட்டு ஏட்டிக்குப் போட்டி செய்து வந்தவர்கள்.

ஆகவே இந்த இரண்டு கட்சியாரும் "**கிடைத்த தடியைக் கொண்டு காங்கிரஸ் பாம்பைக் கொல்லு!**" என்ற கொள்கையைக் கடைப்பிடிப்பது எதிர்பார்க்கக் கூடியதுதான்.

கம்யூனிஸ்டு கட்சியார் இந்தியாவை வெளிநாட்டுக்கு அடிமைப் படுத்தப் பார்க்கிறார்கள் என்ற பேச்சை அடிக்கடி கேட்டிருக்கிறோம். அதை அப்போதெல்லாம் நாம் நம்பவில்லை. "தேசத்துக்கு அவ்வளவு துரோகம் செய்ய அவர்கள் நினைக்க முடியுமா!" என்று எண்ணினோம்.

இத் தேர்தலில் திராவிடக் கழகமும் முஸ்லிம் லீகும் கடைப்பிடிக்கும் அதே கொள்கையைக் கம்யூனிஸ்டுகள் கடைப் பிடிப்பதிலிருந்து நம் பழைய நம்பிக்கை சிதறிப் போகிறது.

காந்தி மகான் சுட்டுக் கொல்லப்பட்ட அன்று தித்திப்புப் பண்டங்கள் வழங்கிக் களிக்கூத்தாடிய ஹிந்துமத உத்தாரண புருஷர்களும் இத் தேர்தலில் "காங்கிரஸை ஒழிப்போம்!" என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

இவர்களைப் போலவே வேறு சில உதிரி கட்சிக்காரர்களும் சுயேச்சைப் புலிகளும் கரடிகளும் "காங்கிரஸை விழுங்கி விடுவோம்" என்று கர்ஜித்து வருகிறார்கள்.

கொள்கை — திட்டம் ஒன்றுமில்லாமல் "காங்கிரஸை எப்படியாவது குழிதோண்டிப் புதைப்போம்" என்று சொல்கிறவர்கள் விஷயத்தில் பொதுமக்கள் மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அவர்களைத் தேச சுதந்திரத்தின் மாபெரும் விரோதிகள் என்றே கருத வேண்டும்.

காங்கிரஸ் நிர்வாகத்தைப் பற்றி நமக்குக் குறைகள் இருந்தால் அவற்றை வெளியிட்டுச் சீர்திருத்தம் செய்து கொள்ளலாம்.

ஆனால் "காங்கிரஸைக் குழிதோண்டிப் புதைக்க" விரும்பும் புண்ணியவான்களுக்கு இடம் கொடுத்தால், அவர்கள் தேசத்தை மீண்டும் அடிமைப் படுகுழியில் தள்ளி விடுவார்கள்; அரும்பாடுபட்டு மகா புருஷர்கள் தேடிக் கொடுத்த தேச சுதந்திரம் பறி போய்விடும்.—இந்த உண்மை காங்கிரஸ் எதிரிகளின் தேர்தல் பிரசாரத்தின் மூலம் நன்கு வெளியாகியிருக்கிறது.

* * *

**கா**ங்கிரஸ் மகா சபையைப் பாம்பு என்று சொல்வதாயிருந்தால், அது சாதாரணப் பாம்பு அல்ல; ஆயிரந் தலையுள்ள ஆதிசேஷனாகும்.

காங்கிரஸ் ஆதிசேஷன் தேச நிர்வாகமாகிய பூபாரத்தை இப்போது தாங்கிக் கொண்டிருக்கிறது. ஜனசமூகம் ஆகிய திருமாலுக்குப் படுக்கையும் தலையணையும் குடையுமாக இருந்து சேவை செய்து வருகிறது.

துஷ்டர்கள் அருகில் வந்து போடும் கோஷங்களையும் செய்யும் விஷமங்களையும் பொறுமையுடன் சகித்துக் கொண்டிருக்கிறது.

கையில் கிடைத்த தடியைத் தூக்கிக் கொண்டு வந்து "அடித்துக் கொன்று விடுவோம்" என்று பயமுறுத்துவோரையும் அலட்சியமாகப் பார்த்துப் புன்னகை செய்து கொண்டிருக்கிறது.

ஆனால் ஆதி சேஷனார் தலையில் வைத்துக் காக்கும் மாமணியாகிய தேச சுதந்திரம் இருக்கிறதே, அதைப் பறித்துக் கொண்டு போக வேண்டும் என்று யாராவது முன் வந்தால், அப்போது அவர் சும்மா இருக்க மாட்டார்.

ஆயிரம் தலைகளில் ஒரு தலையை நீட்டிச் சீறினால் போதும்; சுதந்திர மாமணியைப் பறிக்க வரும் துஷ்டர்கள் பதறி அலறிச் சிதறி ஓடுவார்கள்!

ஆகையால், "சுதந்திர விரோதிகள் ஜாக்கிரதை!" என்று எச்சரிக்கிறோம்.

பழைய நாளில் தேச சுதந்திரத்தின் பரம விரோதியாயிருந்தவர்கள் எல்லாரும் இப்போது "கிடைத்த தடியைக் கொண்டு காங்கிரஸை அடித்துக் கொல்லுங்கள்" என்று சொல்ல முன் வந்திருப்பதைப் பொது மக்கள் நன்கு சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

அவர்களுடைய நோக்கம் யாதாயிருக்கக்கூடும் என்பதையும் எண்ணிப் பார்க்கும்படி கோருகிறோம்.

அப்படி எண்ணிப் பார்த்தால், காங்கிரஸ் நிர்வாகத்தில் நமக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய சிறிய அதிருப்திகளையெல்லாம் இச்சமயம் மூட்டை கட்டி அப்பால் வைத்து விடுவோம்.

காங்கிரஸ் மகாசபை இந்தப் பொதுத் தேர்தலில் அபரிமிதமான வோட்டுகளைப் பெற்று மாபெரும் வெற்றி அடைவதற்கு நாம் ஒவ்வொருவரும் பூரண முயற்சி செய்வோம்.

# கபளீகரத்தின் ஞானோதயம்

ஸ்ரீ பொதுஜனம்' அவர்களிடம் மிஸ்டர் கபளீகரம் ஓடோடியும் வந்து, "ஐயா, பொது ஜனம்! மோசம் போகாதீர்! காங்கிரஸை நம்பி மோசம் போகாதீர்!" என்று அலறினார்.

"இது என்ன! காங்கிரஸின்பேரில் ஏன் இந்தத் திடீர்க் கோபம்!" என்று பொதுஜனம் கேட்டார்.

"காங்கிரஸ் கெட்டுப் போய்விட்டது! அநியாயமாய்க் கெட்டுப் போய்விட்டது! கள்ள மார்க்கெட்டும் லஞ்ச ஊழலும் காங்கிரஸில் புகுந்து நாசமாக்கிவிட்டன!" என்றார் கபளீகரம்.

"ஓகோ! அப்படியா! போன மாதங்கூடத் தாங்கள் காங்கிரஸில் இருந்தீரே! திடீரென்று எப்படி இந்த ஞானோதயம் ஏற்பட்டது!" என்று கேட்டார் பொதுஜனம்.

"ஆமாம், ஐயா! நானும் ஏழெட்டுப் பத்துப் பதினைந்து வருஷமாகச் சில நாள் காங்கிரஸிலும் சில நாள் வெளியிலும் இருந்து வந்தேன். சென்ற மாதம் வரையில் கூட இருந்தேன். ஆனால் காங்கிரஸ் ஊழல் மயம் என்பது சென்ற மாதக் கடைசியில்தான் தெரிந்தது!"

"அது எப்படி ஐயா, தெரிந்தது!"

"என்னை அபேட்சகராக நிறுத்த வேண்டுமென்று மனுப் போட்டிருந்தேன். என்னைப் போடாமல் ஒரு சுயநல பிண்டத்தை அபேட்சகராய்ப் போட்டிருக்கிறார்கள். இதிலிருந்து காங்கிரஸ் எவ்வளவு மோசமாய்ப் போய் விட்டது என்று திட்டமாய்த் தெரிந்தது!"

"ஓகோ! தங்களை ஒரு வேளை அபேட்சகராய் எடுத்திருந்தால்!......"

மிஸ்டர் கபளீகரம் சிறிது திகைத்து விட்டு "அது வேறு விஷயம்! அப்பீலுக்குமேல் அப்பீல் போட்டும் தந்திக்குமேல் தந்தி அடித்தும் என்னைத்தான் எடுக்கவில்லையே! என்னை எப்போது எடுக்கவில்லையோ அப்போதே காங்கிரஸ் ஊழல் மயமாகி விட்டது என்று வெட்ட வெளிச்சமாகி விட்டது! ஆகையால் காங்கிரஸை நம்பி மோசம் போக வேண்டாம். உங்கள் வோட்டை எனக்கே தாருங்கள்!" என்றார் கபளீகரம்.

"ஓகோ! அப்படியானால் தாங்கள் தேர்தலுக்கு நிற்கிறீரா! எப்படி! வேறு எந்தக் கட்சியிலாவது சேர்ந்தா!"

"வேறு கட்சியில் சேர்ந்து காங்கிரஸின் குட்டை வெளிப்படுத்தலாம் என்றுதான் ஸ்ரீமான் மலைவிழுங்கியிடம் போனேன். அவருடைய கட்சியில் சேர்ந்தால் தேர்தல் செலவுக்குப் பணங் கொடுப்பார் என்று கேள்விப்பட்டுப் போனேன். மலைவிழுங்கி 'உன்னைச் சேர்த்துக் கொண்டால் கட்சி நிதிக்குப் பணம் எவ்வளவு கொடுப்பாய்!' என்று கேட்டார். உடனே திரும்பி விட்டேன்..."

"அப்படியானால், நீரே ஒரு கட்சி ஆரம்பித்து விடுவதுதானே!"

"அந்த முயற்சியும் செய்தேன். 'புதிய கட்சி ஆரம்பிக்கப் போகிறேன்; எல்லாரும் வரலாம்' என்று விளம்பரப் படுத்தினேன். தோழர் தோலிருக்கச் சுளை விழுங்கியார் வந்து 'நான் உன் கட்சியில் சேர்ந்தால் எத்தனை பணம் தருவாய்!' என்று கேட்டார். உடனே புதிய கட்சி போர்டை எடுத்து உள்ளே வைத்து விட்டேன்..."

"அப்படியானால், இப்போது உம்முடைய சொந்தப் பொறுப்பிலேயே அபேட்சகராக நிற்கிறீராக்கும்!"

"ஆமாம்! ஐயா! உங்கள் ஓட்டை எனக்குக் கொடுப்பீர் அல்லவா!"

இதற்குள்ளே ஸ்ரீ கபளீகரத்தைப் பின் தொடர்ந்து மிஸ்டர் மலை விழுங்கி, தோழர் தோலிருக்கச் சுளை விழுங்கி எல்லாரும் வோட்டுக் கேட்க வந்து விட்டார்கள். மூவரும் சேர்ந்து "காங்கிரஸ் படுமோசமாகி விட்டது" என்ற பல்லவியைப் பாடினார்கள்.

ஸ்ரீ பொதுஜனம் தமது வோட்டை வெகு ஜாக்கிரதையாகப் பத்திரப்படுத்திக் கொண்டார். அவர்களில் யாருக்கும் தம் வோட்டைக் கொடுப்பதில்லையென்றும், இரட்டை மாட்டுச் சித்திரப் பெட்டியிலேயே தம் வோட்டைப் போடுவது என்றும் தீர்மானித்துக் கொண்டார்.

"உங்களுக்கெல்லாம் கொஞ்ச நாளைக்கு முன்னால் இந்த ஞானோதயம் ஏற்பட்டிருந்தால் நன்றாயிருக்கும். இத்தகைய திடீர் ஞானோதயத்தில் எனக்கு நம்பிக்கை இல்லை. நேருஜீ காங்கிரஸில் இருக்கும் வரையில் காங்கிரஸுக்குத் தான் என் வோட்டு!" என்றார்.

"காங்கிரஸ் மோசம்; பொது ஜனம் படு மோசம்!" என்று கோஷித்துக் கொண்டு, மிஸ்டர் கபளீகரம் முதலியவர்கள் ஓடினார்கள்.

உண்மையான காங்கிரஸ்காரர்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஊழல் இருப்பதாகக் கண்டால்



சென்ற இருபத்தைந்து வருஷங்களாக இந்திய வர்த்தகச் சங்கத்தின் காரியதரிசியாக இருந்து தொண்டாற்றி வரும் ஸ்ரீ ஏ. சி. ராமலிங்கம் அவர்களுடைய சேவையைப் பாராட்டி இந்த மாதம் ஏழாந் தேதி பம்பாய் தாஜ்மகால் ஹோட்டலில் அவருக்கு பம்பாய் இந்திய வர்த்தகச் சங்கத்தார் ஒரு விருந்தளித்துக் கௌரவித்தனர். மேற்படி பாராட்டு விழாவுக்குப் பம்பாயி லுள்ள பிரபல வியாபாரிகளும் பிரமுகர்களும் திரளாக விஜயம் செய்து சிறப்பித்தனர்.

அதைச் சீர்திருத்த முயல்வார்களே யன்றிக் காங்கிரஸிலிருந்து வெளியேற மாட்டார்கள்; வெளியேறிக் காங்கிரஸை எதிர்த்துப் போட்டியிட மாட்டார்கள்.

அப்படி மனச்சாட்சியினால் மிகவும் பாதிக்கப்படுகிற காங்கிரஸ் காரர்களாயிருந்தால், அவர்களுக்குச் சில மாதங்களுக்கு முன்னாலேயே காங்கிரஸின் நிலை தெரிந்து தானிருக்கும்; அவர்கள் அப்போதே வெளியேறியிருப்பார்கள்.

நேற்று வரை காங்கிரஸில் இருந்து, 'உண்மையான காங்கிரஸ்காரன் நான்' என்று பறை யறைந்து கொண்டிருந்து, அபேட்சகர் விண்ணப்பமும் போட்டு, அது நிராகரிக்கப்பட்டவுடன் ஞானோதயம் அடைந்து காங்கிரஸை எதிர்ப்பவர்களை 'அரசியல் நேர்மையில்லாதவர்கள்' என்று திட்டமாகச் சொல்லி விடலாம்.

காங்கிரஸை எதிர்த்து அபேட்சகர்களாக நின்றாலும் சரி, அந்த அபேட்சகர்களை ஆதரித்தாலும் சரி, அத்தகைய திடீர் ஞானோதயக்காரர்களை அரசியல் நேர்மையுள்ளவர்கள் என்று சொல்ல முடியாது.

உதாரணமாக, காரைக்குடி தொகுதியைப் பார்க்கலாம். இத்தொகுதியில் ஸ்ரீ சா. கணேசன் அவர்களும் விண்ணப்பம் போட்டார்; ஸ்ரீ சொக்கலிங்கம் செட்டியாரும் விண்ணப்பம் போட்டார்.

ஸ்ரீ சா. கணேசன் அவர்கள் எல்லா விதத்திலும் தகுதியுடையவர்தான். ஆனால் அவரை ஏனோ மேலிடத்தார் எடுக்கவில்லை; ஸ்ரீ ஏ.ஆர். ஏ.ஆர்.எம். சொக்கலிங்கம் செட்டியார் அவர்களைப் பொறுக்கினார்கள்.

அதனால் என்ன! ஸ்ரீ சொக்கலிங்கம் செட்டியார் நீடித்த காங்கிரஸ்காரர். 1942 போரில் இரண்டு வருஷம் சிறையில் இருந்தவர். காரைக்குடி நகர சபையின் காங்கிரஸ் கட்சியினால் அந்த நகர சபையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அந்தப் பதவியில் இன்றளவும் இருந்து வருகிறவர். அவரைக் காங்கிரஸ் அபேட்சகராய் எடுத்ததற்காகச் செட்டி நாட்டுப் பகுதியிலுள்ள சில காங்கிரஸ் ஊழியர்கள்,—நேற்று வரையில் காங்கிரஸைப் போற்றி வந்தவர்கள்,—இன்று வெளியேறிக் காங்கிரஸை எதிர்க்கும் அபேட்சகருக்கு வேலைசெய்து வருகிறார்கள். இதற்கு அவர்கள் நியாயம் கூறவும் புறப்பட்டிருக்கிறார்கள். காங்கிரஸின் ஊழல் மலிந்து விட்டதென்று இப்போது தான் இவர்களுக்குத் தெரிய வந்ததாம்!

இம்மாதிரியே வேறு சில தொகுதிகளில் நிராகரிக்கப்பட்ட காங்கிரஸ்காரர்கள் காங்கிரஸை எதிர்க்கிறார்கள். இவர்கள் உண்மையான காங்கிரஸ் வாதிகள் அல்ல என்பதை இவர்களுடைய செயலே நிரூபிக்கின்றது. இத்தகையவர்களைக் காங்கிரஸ் அபேட்சகர்களாக எடுக்காதது எவ்வளவு நியாயம் என்பதையும் இவர்களுடைய செயல் நிரூபிக்கின்றது.

காங்கிரஸ் அபேட்சகர் ஜாபிதா வெளியான பிறகு காங்கிரஸை விட்டு வெளியேறியவர்கள், காங்கிரஸை எதிர்த்து வேலை செய்கிறவர்கள்,— இவர்கள்மீது தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கண்டிப்பு நடவடிக்கை எடுத்து வருவதைப் பாராட்டுகிறோம். பண்டித நேரு அடிக்கடி சொல்லி வருகிறபடி, இந்தத் தேர்தலில் வெற்றி தோல்விகூட அவ்வளவு முக்கியமானவை யல்ல; காங்கிரஸ்காரர்களின் அரசியல் நேர்மையை நிலை நாட்டுவதுதான் பரம முக்கியமானது.




அத்தியாயம் 51

## சுழிக் காற்று

காற்று அசையவில்லை; கடல் ஆடவில்லை; கப்பலும் நகரவில்லை.

அலையற்ற அமைதியான ஏரியைப் போல் காணப்பட்ட கடலை நோக்கிய வண்ணம் வந்தியத்தேவன் சிறிது நேரம் சும்மாயிருந்தான். அவன் உள்ளத்தில் மட்டும் பேரலைகள் எழுந்து விழுந்தன.

திடீரென்று இரு கரங்களையும் கடலை நோக்கி நீட்டிக்கொண்டு 'ஓம் ஹ்ரீம் ஹ்ராம் வஷட்!' என்று கூவினான்.

மறு கணத்தில் கையில் கத்தியை எடுத்துக் கொண்டான். சக்கராகாரமாக இரண்டு தடவை சுழற்றினான்.

"ஆம் ஆம்! சமுத்திர ராஜன் பலி கேட்கிறான்! இரட்டைப் பலி கேட்கிறான். தூங்குகிறவர்களைத் தாக்கிக் கொல்லும் இரண்டு சூரர்களைப் பலியாகக் கொடு என்று கேட்கிறான்! பலி கொடுத்தால்தான் மேலே இந்த மரக்கலத்தைப் போக விடுவேன் என்கிறான். எங்கே! உடனே இப்படி இரண்டுபேரும் வந்து தலையை நீட்டுங்கள்! சீக்கிரம்! சீக்கிரம்!" என்று ஆர்ப்பரித்தான்.

ரவிதாஸன் வந்தியத் தேவனை வியப்புடன் உற்றுப் பார்த்தான். 'ஹா! ஹா! ஹா!' என்று மறுபடியும் பேய் சிரிப்பதுபோல் சிரித்தான்!

"தம்பி! இது என்ன விளையாட்டு?" என்றான்.

"அண்ணன்மார்களே! இது விளையாட்டு அல்ல; வினை! சற்று முன் நான் கீழே கட்டப்பட்டுக் கிடந்தபோது சிறிது தூங்கிப் போனேன். அப்போது கனவு கண்டேன். கடலையும் வானத்தையும் ஒன்று சேர்த்த பூதம் போன்ற நீல நிற உருவம் ஒன்று என் முன்னால் நின்றது. ஏதோ சொல்லியது. அது என்னவென்று அப்போது புரியவில்லை; இப்போது புரிந்தது! மந்திர தந்திரங்களில் தேர்ந்த காளி பக்தர்கள் இரண்டு பேருடைய உயிர்ப் பலி வேண்டும் என்று சமுத்திர ராஜன் கோருகிறான். கொடுக்காவிட்டால் இந்தக் கப்பலை மேலே போக விட

முடியாது என்றும் சொல்லுகிறான். ஆறு முரட்டு அராபியர்களின் உயிர்ப் பலியினால் அவன் திருப்தி அடையவில்லை. வாருங்கள்! சீக்கிரம்!" என்று கூறி வந்தியத்தேவன் கையிற்பிடித்தகத்தியை வானை நோக்கி உயர்த்தினான்.

ரவிதாஸனும் தேவராளனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

ரவிதாஸன், "தம்பி! கதை கட்டுவதில் உன்னைப் போன்ற கெட்டிக்காரனை நான் பார்த்ததேயில்லை!" என்றான்.

வந்தியத்தேவன், "ஓ! நான் சொல்வதில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? கதை கட்டுகிறேனா? சமுத்திரராஜனே! இந்த மூடர்களுக்கு நீயே மறுமொழி சொல்!" என்று கூவினான்.

அவன் அவ்வாறு கூவிய குரல் சமுத்திர ராஜனுடைய காதிலே கேட்டது போலும். அதற்கு மறுமொழி கூறவும் சமுத்திரராஜன் விரும்பினான் போலும்.

கடலில் அப்போது ஒரு விந்தையான காட்சி தென்பட்டது. கண்ணுக் கெட்டிய தூரம் நாலு திசையிலும் கடல் ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்தது. சிறிய சிறிய சிறிய சின்னஞ்சிறிய அலைகள் ஆயிரமாயிர மாயிரம் எழுந்து விழுந்தன. இது ஒரு நிமிஷ நேரந்தான். அடுத்த நிமிஷத்தில் அவ்வளவு அலைகளும் வெள்ளிய நுரையின் நுண் துளிகளாக மாறின. விரிந்து பரந்த கடற் பிரதேசமெங்கும் அந்த வெண் நுரைத் துளிகள் துள்ளி விளையாடின. விசாலமான பசும்புல் தரையில் கோடி கோடி கோடி தும்பை மலர்கள் இளங் காற்றில் உருண்டு உருண்டு உருண்டு போய்க் கொண்டிருந்தால் எப்படி இருக்கும்! அவ்வாறு இருந்தது அச்சமயம் கடலின் காட்சி!

ஆம்; இலேசான இளங்காற்று,—இனிய குளிர்ந்த காற்று,—அந்த மரக்கலத்தையும் ஒரு கணம் தழுவிக் கொண்டு அப்பால் சென்றது. கப்பல் ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்தது. வெப்பத்தினால் வறண்டிருந்த வந்தியத் தேவனுடைய உடலும் சிலிர்த்தது.

ரவிதாஸனும் தேவராளனும் 'ஹாஹா ஹா!' என்று சிரித்தார்கள்!

"தம்பி! சமுத்திர ராஜனே உன் கேள்விக்கு மறுமொழி சொல்லி விட்டான்! நாங்கள் எங்களைப் பலி கொடுக்க ஆயத்தமாக வேண்டியது தான்!" என்றான் ரவிதாஸன்.

வந்தியத்தேவனுடைய உள்ளம் கலக்கமுற்றது. கடலில் ஏற்பட்ட அந்தச் சிலுசிலிர்ப்பும் உடனே ஏற்பட்ட மாறுதலும் அவனைத் திகைக்கச் செய்திருந்தன.

ஆகா! இது என்ன? அவ்வளவு ஆயிரமாயிரம் சிறிய அலைகளும் கோடானு கோடி கோடி வெண் நுரைத் துளிகளும் எங்கே போயின? மாயமாய்ப் போய் விட்டனவே? மறுபடியும் கடல் அமைதியுற்றுப் பச்சை நிறத் தகடு போல் காணப்படுகிறதே! சற்று முன் கண்ட காட்சி உண்மையாக நிகழ்ந்ததா? அல்லது வெறும் பிரமையா? ஒரு வேளை இந்த மந்திரவாதி ரவிதாஸனின் மந்திர சக்தியாகத்தான் இருக்குமோ!

"அதோ பார்த்தாயா? தம்பி! கடல் கூறியதை வானமும் ஆமோதிக்கிறது!" என்று ரவிதாஸன் தென்மேற்கு திசையைச் சுட்டிக் காட்டினான்.

அவன் காட்டிய திசையில்,—பச்சைக் கடலும் நீல வானமும் ஒன்று சேரும் மூலையிலே,—ஒரு சின்னஞ் சிறு கரிய மேகத் துணுக்கு ஒரு சாண் உயரம் எழுந்து நின்றது. அந்தக் கரிய மேகத் துணுக்கின் உச்சிப் பகுதி செக்கச் செவேலென்று இரத்தச் சிகப்பு வர்ணத்துடன் திகழ்ந்தது.

சாதாரண நாட்களில் இந்தத் தோற்றத்தை வந்தியத்தேவன் கவனித்திருக்கவே மாட்டான். கடலும்வானும் சேரும் மூலையில் மேகத்திரள் காணப்படுவது ஓர் ஆச்சரியமா, என்ன? இல்லைதான்! ஆயினும் அந்தச் சிறிய தோற்றமும் அந்த வேளையில் நம் கதாநாயகனுடைய மனதைச் சிறிது கலக்கிவிட்டது.

மறு கணத்தில் வந்தியத்தேவன் சமாளித்துக் கொண்டான். 'இந்த மந்திரவாதியின் வலையில் நாம் விழுந்துவிடக் கூடாது' என்று மனதிற்குள் உறுதி செய்து கொண்டான்.

ரவிதாஸனை ஒரு தடவையும் தேவராளனை ஒரு தடவையும் விழித்துப் பார்த்து, "அப்படியானால் ஏன் தாமதம்? வாருங்கள்!" என்று சொல்லிக் கத்தியை ஓங்கி வீசினான்.

"அப்பனே! நாங்கள் பலியாவதற்கு முன்னால் எங்கள் குல தெய்வத்தைப் பிரார்த்தனை செய்ய விரும்புகிறோம். அரை நாழிகை அவகாசம் கொடு!" என்றான் ரவிதாஸன்.

"சரி! பிரார்த்தனையைச் செலுத்தி விட்டு உடனே வாருங்கள். உங்கள் தந்திர மந்திரம் ஒன்றையும் என்னிடம்

காட்ட வேண்டாம். காட்டினாலும் பலிக்காது!" என்றான் வந்தியத்தேவன்.

"இதோ வந்து விடுகிறோம். எங்களுடைய ஆயுதத்தையும் இங்கேயே போட்டு விட்டுப் போகிறோம், பார்!" என்றான் ரவிதாஸன்.

அப்படியே இருவரும் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு அம் மரக்கலத்தின் இன்னொரு புறத்துக்குச் சென்றார்கள்.

அந்த அரை நாழிகை அச்சமயம் வந்தியத் தேவனுக்கும் தேவையாயிருந்தது. கடலிலும் வானிலும் ஏற்பட்ட தோற்றங்களினால் விளக்கமில்லாத கலக்கம் அவனுடைய உள்ளத்தில் எழுந்து அவன் உடம்பையும் சிறிது தளரச் செய்திருந்தது. அவசியம் நேர்ந்தால் ஒரே கத்தி வீச்சில் அந்தக் கிராதகர்கள் இருவரையும் தீர்த்துக் கட்ட அவன் முடிவு செய்திருந்தான். ஆனால் அதற்கு வேண்டிய பலம் தன் கையில் அச்சமயம் இருக்குமா என்ற ஐயம் ஏற்பட்டிருந்தது. ஆகையால் மனதைத் திடப்படுத்திக் கொண்டு கையிலும் பூரண பலத்தை வருவித்துக் கொள்ளச் சிறிது அவகாசம் அவனுக்கு வேண்டியிருந்தது.

தென்மேற்கு மூலையில் அவன் கவனம் மறுபடியும் தற்செயலாகச் சென்றது. சற்று முன்னால் சாண் உயரம் தோன்றிய மேகத் திரள் இப்போது முழ உயரமாக வளர்ந்திருந்தது. உச்சியில் இரத்தச் சிகப்பு நிறம் சிறிது மங்கி யிருந்தது.

மேகத்திரள் மேலும் மேலும் உயர்ந்து வருவதாகத் தோன்றியது.

முதல் சிலு சிலிர்ப்புடன் நின்றுவிட்டிருந்த காற்று மறுபடியும் நிதானமாக வரத் தொடங்கியது. கடலிலும் கலக்கம் காணப்பட்டது. சிறிய சிறிய அலைகள் நடனமாடத் தொடங்கி யிருந்தன.

மேகத்திரள் மேலும் மேலும் வானில் உயர்ந்து வந்து கொண்டிருந்தது.

காற்றின் வேகமும் அதிகரித்து வருவதாகத் தோன்றியது. கப்பல் இலேசாக அசைய ஆரம்பித்தது.

காற்றின் ரீங்காரத்துக்கும் அலைகளின் சலசலப்புக்கும் இடையில்,—அது என்ன சத்தம்? கடலில் ஏதோ விழுந்ததுபோல் சத்தம் கேட்டதே!

வந்தியத் தேவன் பின் பக்கம் திரும்பிப் பார்த்தான். ரவிதாஸனையும் தேவராளனையும் காணவில்லை. அதில் அதிசயமும் இல்லை. கப்பலின் மறு பக்கத்திலே அவர்கள் இருப்பார்கள். பாய்மரங்களும் கப்பலின் மைய மேடையும் அவர்களை மறைத்திருக்கின்றன.

ஆ! இது என்ன? துடுப்புகளினால் படகு தள்ளும் சத்தம் அல்லவா கேட்கிறது?......

வந்தியத்தேவன் உடனே ஓடிச் சென்று கப்பலின் மறு பக்கத்தை அடைந்தான். அவன் அங்கே கண்ட காட்சி உண்மையில் அவனைத் திடுக்கிடச் செய்தது. அப்படி நடக்கக்கூடும் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. தன்னைச் சமரசப்படுத்துவதற்காக அவர்கள் கலந்து யோசனை செய்யப் போயிருக்கிறார்கள் என்றே நினைத்தான். ஆனால் அவர்கள் கப்பலின் மறு பக்கத்தில் சேர்த்துக் கட்டி யிருந்த சிறு படகை அறுத்து விட்டுக் கடலிலே இறக்கி அதில் ஏறிக் கொண்டிருந்தார்கள்! துடுப்பு வலித்துப் படகைத் தள்ளவும் ஆரம்பித்து விட்டார்கள்!

வந்தியத் தேவனைப் பார்த்ததும் ரவிதாஸன் சிரித்தான். "தம்பி! சமுத்திர ராஜனுக்குப் பலியாக எங்களுக்கு விருப்பம் இல்லை. தெரிகிறதா?" என்றான்.

வந்தியத்தேவன் ஒரு நொடியில் தன் நிலையை உணர்ந்தான். அந்தப் பெரிய மரக்கலத்தில் தன்னைத் தனியாக விட்டு விட்டு அவர்கள் போகிறார்கள். கப்பல் ஓட்டும் கலையைப் பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது. கடலில் எந்த இடத்தில் கப்பல் நிற்கிறது, எந்த திசையாகப் போனால் எங்கே போய்ச் சேரலாம் என்பதொன்றும் அவனுக்குத் தெரியாது. அப்படிப்பட்ட அநாதரவான நிலையில் அவனை விட்டு விட்டு அவர்கள் போகிறார்கள்.

"பாவிகளே! என்னையும் அழைத்துக் கொண்டு போகக் கூடாதா?" என்று கேட்டான்.

"தம்பி! சமுத்திர ராஜனுக்கு ஒரு பலிகூட இல்லாமற் போகலாமா?" என்றான் ரவிதாஸன்.

படகு கப்பலை விட்டு அகன்று போய்க் கொண்டே யிருந்தது.

கடலில் குதித்துப் படகைப் போய்ப் பிடிக்கலாமா என்று வந்தியத் தேவன் ஒரு கணம் நினைத்தான். உடனே அந்த எண்ணத்தைக் கை விட்டான். அவனுக்கோ நன்றாக நீந்தத் தெரியாது. கப்பலிலிருந்து குதிப்பதற்கே மனது திடப் படாது. அப்படிக் குதித்துத் தட்டுத் தடுமாறிச் சென்று படகைப்

பிடித்தாலும் அந்தக் கிராதகர்கள் என்ன செய்வார்களோ, என்னமோ? தன்னிடம் அவர்களுடைய இரகசியத்தை வெளியிட்டு விட்டார்கள்! தான் அவர்களுடன் ஒருநாளும் சேரப் போவதில்லையென்பதையும் தெரிந்து கொண்டார்கள். படகைப் பிடிக்கப் போகும் சமயத்தில் அவர்கள் தன்னைத் துடுப்பினால் அடித்துக் கொல்லப் பார்க்கலாம். தான் தண்ணீரில் தத்தளித்துக் கொண்டே படகில் உள்ளவர்களுடன் சண்டை போட முடியாது அல்லவா?

போகட்டும்! போய்த் தொலையட்டும்! அந்தச் சண்டாளக் கொலைகாரர்களுடன் ஒரு படகிலே இருப்பதைக் காட்டிலும் இந்தப் பெரிய கப்பலில் தன்னந்தனியாக இருப்பதே மேல்! இதற்கு முன்னால் எத்தனையோ சங்கடங்களிலிருந்து கடவுளின் கிருபையினால் தான் தப்பிப் பிழைக்கவில்லையா? இந்த அபாயத்திலிருந்து தப்புவதற்கும் கடவுள் ஏதேனும் வழிகாட்டுவார்! பாவிகள் போகட்டும்!...

ஆனால் அவர்களை உயிருடன் போக விட்டது சரியா? அவர்கள் எங்கே போய்க் கரை ஏறுவார்களோ? இன்னும் என்னென்ன சூழ்ச்சிகளையும் கோர கிருத்யங்களையும் செய்வார்களோ?— கடவுள் இருக்கிறார். நாம் என்ன செய்ய முடியும்? எப்படியாவது இளவரசருடன் மறுமுறை சேர்ந்து விட்டால் போதும்! இருந்தாலும் அவர் இப்படி என்னைக் கைவிட்டிருக்கக் கூடாது! பூங்குழலியுடன் என்னையும் யானை மீது ஏற்றி அழைத்துப் போயிருக்கலாம். மறுபடியும் அவரைச் சந்திக்க நேர்ந்தால், கட்டாயம் பலமாகச் சண்டை பிடிக்க வேண்டும். "உங்கள் பழமையான சோழ குலத்தின் சிநேக தர்மம் இதுதானா?" என்று கேட்க வேண்டும். ஆனால் அப்படிக் கேட்கும் சந்தர்ப்பம் வரப் போகிறதா?...இளவரசரை மீண்டும் பார்க்கப்போகிறோமா?... ஏன் பார்க்க முடியாது? நான் இந்தச் சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டதைச் சேநாதிபதியும் ஆழ்வார்க்கடியானும் பார்த்திருக்கிறார்கள். அவர்கள் ஏதாவது செய்யாமலா இருப்பார்கள்? இளவரசரை அவர்கள் சந்தித்திருந்தால் கட்டாயம் சொல்லியிருப்பார்கள் அல்லவா?

இப்படி வந்தியத்தேவன் யோசித்துக் கொண்டு நின்ற நேரத்தில் படகு கடலில் வெகு தூரம் போய்விட்டது என்பதைக் கவனித்தான். படகு அவ்வளவு வேகமாகச் சென்றது எப்படி? படகு மட்டும் போகவில்லை; தான் ஏறியிருந்த கப்பலும் இலேசாக அசைந்து நகர்ந்துகொண்டிருக்கிறது. அதனாலேதான் கப்பலுக்கும் படகுக்கும் அவ்வளவு சீக்கிரத்தில் அவ்வளவு தூரம் ஏற்பட்டு விட்டது! கடலில் அலைகள் பெரிதாகிக் கொண்டு வருவதையும் வந்தியத்தேவன் பார்த்தான். அதுமட்டுந்தானா? இது என்ன? பட்டப்பகலில் திடீரென்று ஒரு பக்கம் இருண்டு வருகிறதே?—

தென் மேற்குத் திசையை வந்தியத்தேவன் நோக்கினான். சற்று முன்னால் முழ உயரம் தெரிந்த மேகம் அதற்குள் பிரம்மாண்டமாக வளர்ந்து படர்ந்து மேற்கு வானத்தைப் பெரும்பாலும் மறைத்து விட்டதைக் கண்டான். இன்னும் அம்மேகங்கள் திட்டுத் திட்டாகத் திரண்டு புரண்டு வானத்தில் வெகு வேகமாக மேலேறி வந்தன. அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே மேற்கு வானத்தில் பாதி தூரம் இறங்கியிருந்த சூரியனை மறைத்து விட்டன. பிறகு, மேற்குத் திசையும் தெற்குத் திசையும் மேலும் இருண்டு வந்தன. வானத்தின் கரிய மேகங்கள் கடலிலும் பிரதிபலித்துக் கடல் நீரையும் கரிய மை நிறமாகச் செய்தன. கடல் எங்கே முடிகிறது, வானம் எங்கே தொடங்குகிறது என்று கண்டு பிடிக்க முடியாமல் கடலும் வானமும் ஒரே கன்னங் கரிய இருள் நிறம் பெற்றிருந்தன.

மேகத் திரள்கள் மேலும் புரண்டு உருண்டு வந்தியத்தேவனுடைய தலைக்கு மேலே வந்தன. பிறகு கீழ்த் திசையிலும் இறங்கத் தொடங்கின.

படகு சென்ற திசையை வந்தியத்தேவன் நோக்கினான். படகு இருந்த இடமே தெரியவில்லை. அவனுடைய பார்வையின் எல்லைக்கு அப்பால் போய் விட்டது போலும்!

காற்றின் மெல்லிய ரீங்காரம் இப்போது 'ஹோ' என்ற பெரும் இரைச்சலாக மாறி விட்டது.

அத்துடன், நிமிஷத்துக்கு நிமிஷம் பெரிதாகி வந்த அலைகளின் இரைச்சலும் சேர்ந்தது.

கப்பலில் விரித்திருந்த பாய்கள் சடபடவென்று அடித்துக் கொண்டன.

மரங்களும் கட்டைகளும் ஒன்றோடொன்று உராய்ந்து ஆயிரம் குடுமிக் கதவுகளைத் திறந்து மூடும் சத்தத்தை உண்டாக்கின.

பாய் மரங்களை வந்தியத் தேவன் அண்ணாந்து பார்த்தான். அவற்றின்

நிலையிலிருந்து கப்பல் ஒரு திசையாகப் போகாமல் சுழன்று சுழன்று வருகிறது என்று தெரிந்து கொண்டான்.

'சுழிக் காற்று' என்று அடிக்கடி சொன்னார்களே! அந்தச் சுழிக் காற்றுத் தான் அடிக்கப் போகிறது போலும்!

சுழிக்காற்று அடிக்கும் போது பாய் மரங்களிலிருந்து பாய்களைக் கழற்றிச் சுற்றி வைக்க வேண்டும் என்று வந்தியத் தேவனுடைய அறிவுக்குப் புலப்பட்டது. ஆனால் அவன் ஒருவனால் அது எப்படி முடியும்? பத்துப் பேர் சேர்ந்து செய்ய வேண்டிய காரியம் அல்லவா? பத்துப் பேர் இல்லாவிட்டாலும் நாலு பேராவது வேண்டும். ஒருவன் தனியாக என்ன செய்வது? கடவுள் விட்டவழி விடுகிறார், கப்பல் அடைந்த கதியை அடைகிறது என்று சும்மா இருக்க வேண்டியதுதான்!

கப்பல் அடையப் போகிற கதி என்ன வென்று அவனுக்குச் சீக்கிரத்திலேயே தெரிந்து போயிற்று.

அப்படியும் இப்படியும் சிறிது நேரம் அலைப்புண்டிருந்து பிறகு கடலில்மூழ்கிப் போக வேண்டியதுதான்! மூழ்குவதற்கு முன்னால் சுக்குச் சுக்காக உடைந்து போனாலும் போகும்! கப்பலின் கதி எப்படியானாலும் தன்னுடைய கதியைப் பற்றிச் சந்தேகமில்லை!

நடுக்கடலில் மரணம்!



அந்தக் கும்பகோணத்துச் சோதிடன் இதைப் பற்றி ஒரு வார்த்தையும் சொல்ல வில்லை, பார்! சோதிடனும் சோதிடன்! அவனை மறுபடி பார்க்க நேர்ந்தால்...... பைத்தியக்காரத்தனம்! அவனை மறுபடி பார்ப்பது ஏது?

திடீரென்று வந்தியத்தேவன் தோளில் கெட்டியான பொருள் ஏதோ விழுந்தது. சட, படவென்று கப்பல் முழுவதும் சிறிய சிறிய கூழாங்கற்கள் விழுந்தன. கடலிலும் ஏராளமாக விழுந்தன. அந்தக் கூழாங்கற்கள் எப்படிப் பளிங்கு போல் பிரகாசிக்கின்றன! வானத்தி லிருந்து இவை எப்படி விழுகின்றன!

இன்னும் இரண்டு மூன்று கற்கள் அவன் தலையிலும் முதுகிலும் தோள் களிலும் விழுந்தன. அவை விழுந்த இடத்தில் முதலில் வலி; பிறகு ஒரு குளிர்ச்சி. கப்பலில் விழுந்த கற்களைப் பார்த்தால், ஆ! அவை உருகிக் கரைந்து போய்க் கொண்டிருக்கின்றனவே?—ஆம்; இது பனிக்கட்டி மழை! அதுவரை வந்தியத் தேவன் அத்தகைய மழையைப் பார்த்தது மில்லை; அநுபவித்ததுமில்லை. மடிவதற்கு முன்னால் இந்த அற்புதத்தைப் பார்க்க முடிந்ததே என்ற குதூகலம் அவன் உள் ளத்தில் தோன்றியது.

கப்பல் தளத்தில் உட்கார்ந்து, கரைந்து கொண்டிருந்த பனிக்கட்டிக் கற்களைத் தொட்டுப் பார்த்து மகிழ்ந்தான். அப்பா! என்ன சில்லிப்பு! தொடும் போது தீயைத் தொடுவது போல் அல்லவா இருக்கிறது? ஆனால் தீ தோலைச் சுட்டுத் தீய்ப்பது போல் அது செய்யவில்லை. விரைவில் சூடு குளிர்ச்சியாகி விடுகிறது.

கல் மழை எதிர்பாராமல் வந்தது போலவே சட்டென்று நின்றது. பெய்த நேரம் அரைக்கால் நாழிகைகூட இராது.

பிறகு சாதாரண மழை பெய்யத் தொடங்கியது. மழை ஜலம் கப்பலில் விழுந்து சிதறி ஓடிக் கடலில் விழுந்து விடுவதை வந்தியத்தேவன் கவனித்தான். சோழ நாட்டு மரக்கலத் தச்சர்களின் கெட்டிக்காரத் தனத்தை வியந்தான். எத்தனை மழை பெய்தாலும் எத்தனை பெரிய அலைகள் மோதிக் கடல் ஜலம் கப்பலில் வந்தாலும், மீண்டும் கடலிலேயே தண்ணீர் போய் விழும்படியாக அக்கப்பல் அமைக்கப் பட்டிருந்தது. கப்பலின் கீழ்ப் பகுதி உடைந்து கடல்

நீர் உள்ளே புகுந்தாலன்றி அதை மூழ்கடிக்க முடியாது!

இதைப் பார்த்ததும் அவனுக்குச் சிறிது தைரியம் உண்டாயிற்று. உடனே ஒரு நினைவு வந்தது. தன்னைக் கட்டிப் போட்டிருந்த அறைக் கதவு திறந்திருந்தால் அதன் வழியாகத் தண்ணீர் உள்ளே புகுந்து விடலாம். ஓடிப் போய்ப் பார்த்தான். அவன் நினைத்தபடி கதவு திறந்து காற்றில் அடித்துக் கொண்டிருந்தது. கதவை இறுக்கிச் சாத்தித் தாளிட்டான்.

மேலே காற்றும் மழையும் பொறுக்க முடியாமற் போனால் அந்த அறைக்குள்ளே புகுந்து கூடத் தான் கதவைத் தாளிட்டுக் கொள்ளலாம். பிறகு கடவுள் விட்ட வழிவிடுகிறார் என்று நிம்மதியாக இருக்கலாம். இவ்வளவு பத்திரமான கப்பலை விட்டு அந்த மூட்டாள்கள் இருவரும் படகில் ஏறிப் போய் விட்டதை நினைத்து வந்தியத்தேவன் அநுதாபப் பட்டான். ஆனால் அந்தப் படகின் அமைப்பும் விசித்திரமானதுதான். எவ்வளவு காற்று அடித்தாலும் மழை பெய்தாலும் அதை மூழ்க அடிக்க முடியாது. அப்படிப் படகு உடைந்து முழுகினாலும் பக்கத்தில் அதனோடு சேர்த்துக் கட்டியுள்ள கட்டை ஒன்று இருக்கிறது. அதைப் பிடித்துக் கொண்டு அந்தக் கொலை பாதகர்கள் தப்பிக் கரை சேர்ந்து விடுவார்கள்! அநேகமாகக் கோடிக் கரைக்குச் சமீபமாகப் போய்க் கரை ஏறுவார்கள்!......

கோடிக் கரையிலிருந்து வந்தியத் தேவனுடைய உள்ளம் பழையாறைக்குத் தாவியது. சக்கரவர்த்தியின் திருக்குமாரிக்குத் தனக்கு நேர்ந்த கதி எப்படித் தெரியப் போகிறது? அவன் இட்ட பணியை நிறைவேற்றும் முயற்சியிலே



தான் நடுக்கடலில் மூழ்கியதை யார் அவனுக்குத் தெரிவிக்கப் போகிறார்கள்? கடல் தெரிவிக்குமா? காற்று சென்று சொல்லுமா?—கடவுளே! அந்த மாதரசியைச் சந்திப்பதற்கு முன்னாலேயே நான் இறந்து போயிருக்கக் கூடாதா? போர்க்களத்தில் வீர மரணம் எய்தியிருக்கக் கூடாதா? சொர்க்க பூமியைக் கண்ணால் பார்க்கச் செய்துவிட்டு உடனே அதல பாதாளத்தில் தள்ளுவதுபோல் அல்லவா இருக்கிறது!......

காற்றின் வேகம் அதிகமாகிக் கொண்டிருந்தது. கடலின் கொந்தளிப்பு மிகுதியாகிக் கொண்டிருந்தது. கப்பலின் பாய்மரங்கள் பேய் பிசாசுகளைப் போல் பயங்கரமான சத்தமிட்டுக் கொண்டு ஆடின.

இருள் மேலும் மேலும் கரியதாகிக் கொண்டு வந்தது. இருட்டை விடக் கரியதான இருட்டு எப்படி இருக்க முடியும்?—அப்படியும் இருக்க முடியும் என்று தோன்றியது.

திடீரென்று வானத்தில் ஒரு மின்னல் தோன்றி ஒரு மூலையிலிருந்து ஒரு மூலை வரை பாய்ந்தது.

அதற்குப் பிறகு தோன்றிய இருட்டு இருளைவிடக் கரியதாயிருந்தது.

மின்னலைத் தொடர்ந்து இடிமுழக்கம் கேட்டது; கப்பல் அதிர்ந்தது; கடல் அதிர்ந்தது; திசைகள் அதிர்ந்தன.

இன்னொரு மின்னல் அடிவானத்தில் இருளைக் கிழித்துக் கொண்டு புறப்பட்டது. அது மேலும் மேலும் நீண்டு, கப்பும் கிளையும் விட்டுப் படர்ந்து, பற்பல ஒளிக்கோலங்கள் ஆகாச மெங்கும் போட்டு, வானையும் கடலையும் ஜோதி மயமாகச் செய்துவிட்டு, அடுத்த கணத்தில் அடியோடு மறைந்தது.

இடி முழக்கம் தொடர்ந்தது. அம்மம்மா! அண்டகடாகங்கள் வெடித்து விழுகின்றன என்பதில் சந்தேகமில்லை.

மேலும் மின்னல்கள்; இடி முழக்கங்கள். "இன்னும் வானம் பிளக்கவில்லையே; இது என்ன அதிசயம்!" என்று வந்தியத்தேவன் எண்ணமிட்டானோ, இல்லையோ, அந்தக் கணமே ஆகாசம் வெடித்துப் பிளந்தது.

வெடித்த பிளப்பின் வழியாகப் பிரளய வெள்ளம் பொழிந்தது.

ஆம்; அதை மழை என்றே சொல்வதற்கில்லை. வான வெளியில் ஒரு கடல் குமுறிக் கொண்டிருந்து அது திடீரென்று தோன்றிய பிளவின் வழியாகக் கொட்டுவதுபோலவே இருந்தது.

கடல் அலைகள் ஆவேச தாண்டவமாடின. மின்னல் வெளிச்சத்தில் கண்ணுக் கெட்டிய தூரம் ஆடும் மலைச் சிகரங்கள் காட்சி அளித்தன.

காற்றின் கொம்மாளம் உச்சத்தை அடைந்தது. ஆடும் மலைச் சிகரங்களை அப்படியே பெயர்த்து எடுத்து வாயு பகவான் வானவெளியில் விசிறி எறிந்து விளையாடினார்.

வந்தியத் தேவனுடைய கப்பல் மீதும் அந்த நீர் மலைகளில் சில வந்து மோதின.

மேலேயிருந்து மழை வெள்ளம் தொபு தொபுவென்று கொட்டியது; நாலா பக்கமிருந்தும் அலைமலைகள் வந்து மோதித் தாக்கின. விரித்த பாய்மரங்கள் மீது சுழற் காற்று தாக்கிப் படுத்திய பாட்டைச் சொல்லி முடியாது.

இவ்வளவையும் பொறுத்துக் கொண்டு அந்தச் சோழநாட்டுத் தச்சர்கள் கட்டிய அதிசய மரக்கலம் சுழன்று சுழன்று வந்து கொண்டிருந்தது.

ஆனால் எவ்வளவு நேரந்தான் சுழன்று கொண்டிருக்க முடியும்? எவ்வளவு நேரம் அந்த மாபெரும் பூதங்களின் தாக்குதலைக் கப்பலினால் சமாளிக்க முடியும்?—முடியாது; இந்த விநாடியோ, அடுத்த விநாடியோ, கப்பல் முழுக வேண்டியதுதான். அத்துடன் வந்தியத் தேவனும் முழுக வேண்டியதுதான்.

எனினும், அந்த எண்ணம் அவனுக்கு இப்போது சோர்வை அளிக்கவில்லை. அப்படித் தனக்கு நேரப் போகும் மரணம் ஓர் அற்புதமான மரணம் என்று கருதினான்.

எழும்பிக் குதித்த அலைகளைப்போல் அவன் உள்ளமும் குதூகல தாண்டவம் ஆடத் தொடங்கியது.

காற்றின் பேரிரைச்சல், அலைகளின் பேரொலி, இடிகளின் பெரு முழக்கம் இவற்றுடனே வந்தியத்தேவனுடைய குரலும் சேர்ந்தது. "ஹா ஹா ஹா!" என்று வாய் விட்டுச் சிரித்தான்.

அந்தக் காட்சியை யெல்லாம் நன்றாய்ப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே அவன் முன் ஜாக்கிரதையுடன் பாய் மரத்தின் அடித் தண்டுடன் சேர்த்துத் தன்னைக் கட்டிக் கொண்டிருந்தான்.

கப்பல் சுழன்றபோது பாய் மரமும் சுழன்றது; வந்தியத்தேவனும் சுழன்றான்.

இப்படி எத்தனை நேரம் கப்பலும் பாய் மரமும் வந்தியத்தேவனும் சுழன்று கொண்டிருந்தார்கள் என்று தெரியாது.

பல யுகங்களாகவும் இருக்கலாம்; சில விநாடிகளாகவும் இருக்கலாம். காலதேச வர்த்தமான உணர்ச்சிகளை யெல்லாம் கடந்த அமர நிலையை வந்தியத்தேவன் அப்போது அடைந்திருந்தான்.

காற்றின் வேகம் சிறிது குறைவது போலத் தோன்றியது. பிரளயமாகக் கொட்டிய மழை நின்று விட்டது. சிறு தூற்றல்கள் போட்டுக் கொண்டிருந்தன.

மின்னலும் இடியும் நின்றுவிட்டது போலத் தோன்றியது. கடல் கன்னங்கரிய இருள் பிழம்பாகத் தோன்றியது.

வந்தியத்தேவன் சிறிது நேரத்துக்கு முன்னால் மின்னல்களின் ஒளி வீச்சைத் தாங்க முடியாமல் கண்களை மூடிக் கொண்டிருந்தான். இடிகளின் பெரு முழக்கத்தைக் கேட்க முடியாமல் காதுகளைத் தன் கைகளினால் இறுக்கிப் பொத்திக் கொண்டிருந்தான்.

இப்போது கண்ணைத் திறந்து பார்த்தான்; கைகளை அகற்றிக் காதுகளையும் திறந்து விட்டான்.

ஆகா! இவ்வளவு பெரிய சுழிக்காற்று விபத்திலிருந்து நான் தப்பித்துக் கொண்டேனா! கடவுள் காப்பாற்றி விட்டாரா? மீண்டும் பழையாறை அரசிளங்குமரியை இந்த ஜன்மத்தில் காணப் போகிறேனா? இளவரசரைச் சந்தித்து அளவளாவப் போகிறேனா?......

அதற்குள் அவசரப்படக் கூடாது. இந்தக் கப்பல் இப்போது எங்கே இருக்கிறதோ, யார் கண்டது? இது பத்திரமாய்க் கரை சேரும் என்று எப்படிச் சொல்ல முடியும்? கப்பல் தப்பினாலும் நான் உயிரோடு தப்பிக் கரையேறுவேன் என்பது என்ன நிச்சயம்?

இன்னும் எத்தனை எத்தனை அபாயங்கள் இருக்கின்றனவோ?...

வந்தியத்தேவனுடைய மனதில் இந்தக் கேள்வி எழுந்ததும் அதற்குப் பதில் சொல்வது போல வானத்தைக் கீறிக் கொண்டு ஒரு மின்னல் மின்னியது. அதன் பிரகாசம் அவன் கண்ணெதிரே நூறு சூரியனைக் கொண்டு வந்து நிறுத்தியது போலிருந்தது. இருட்டிலாவது கொஞ்சம் பார்க்கலாம்; அந்தப் பயங்கரப் பிரகாசத்தில் ஒன்றுமே பார்க்க முடியவில்லை. தன் கண்களையே அம் மின்னல் பறித்து விட்டதோ என்று வந்தியத்தேவன் அஞ்சினான். எரிச்சல் எடுத்த கண்களை இறுக்கி மூடிக் கொண்டான். அந்தக் கணத்திலேயே அவன் செவிகளுக்கும் ஆபத்து வந்து விட்டது. எத்தனையோ இடிமுழக்கங்களை வந்தியத்தேவன் முன்னம் கேட்டிருக்கிறான்; இன்றைக்கும் எத்தனையோ கேட்டான். ஆனால் இப்போது இடித்த இடியைப் போல—சே! அது இடியா? இந்திரனுடைய வஜ்ராயுதம் அவனுடைய காதின் வழியாகப் பிரவேசித்து மண்டைக்குள்ளேயே நுழைந்து தாக்கியது போலிருந்தது.

சற்று நேரம் வந்தியத்தேவன் கண்களையும் திறக்க முடியவில்லை. காதிலோ 'ஓய்' என்ற சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

மூடியிருந்த கண்கள் ஏதோ சமீபத்தில் தலைக்கு மேலே புதிய வெளிச்சம் பரவியிருப்பதை உணர்ந்தன.

காதிலும் 'ஓய்' சத்தத்துக்கு மத்தியில் வேறொரு விநோத சத்தம் கேட்டது. காட்டில் தீப்பற்றி எரியும் போது, மரங்களில் தீப்பிடிக்கும் போது, உண்டாகும் சத்தத்தைப் போல் தொனித்தது.

வந்தியத் தேவன் கண்ணைத் திறந்து பார்த்தான். அவன் இருந்த கப்பலின் பாய் மரம் உச்சியில் தீப்பற்றி எரிவதைக் கண்டான்.

ஆகா! இப்போது புரிகிறது! அந்த மின்னல் ஏன் அவ்வளவு பிரகாசமாயிருந்தது, அந்த இடி ஏன் அவ்வளவு சத்தமாக ஒலித்தது என்று இப்போது விளங்குகிறது.

அந்தக் கப்பல் மேலேயோ, அல்லது, வெகு சமீபத்திலோ இடி விழுந்திருக்கிறது! அதனால் பாய்மரத்தில் தீப்பிடித்திருக்கிறது!

பஞ்ச பூதங்களில் இரண்டு பூதங்கள் அந்தச் சோழ நாட்டு மரக்கலத்தைத் தாக்கி அழிக்கப் பார்த்தன. நீரும் காற்றும் தோல்வியுற்றன. வருணனும் வாயுவும் சாதிக்க முடியாத காரியத்தைச் சாதிக்க இப்போது அக்கினி பகவான் தோன்றியிருக்கிறார்! (தொடரும்)

அட்டைப்பட விளக்கம்

"பாலைவனம் சோலைவனம் ஆகவேண்டும்
பசுங்கிளிகள் அங்கிருந்து பாடவேண்டும்"

என்றார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. அது மட்டும் போதாது; அத்தகைய சோலைகளில் நமது வருங்கால சந்ததிகள் குதூகலத்துடன் ஆடிப் பாடிக் களித்து விளையாட வேண்டும் என்கிறார் இந்த இதழ் அட்டைப் படம் வரைந்த சித்திரக்காரர்.

கவிஞரின் விருப்பமும் கலைஞரின் ஆசையும் நிறைவேற வேண்டுமானால், இன்றைய நிலையில், நம் ஒப்பற்ற தலைவராகிய நேருஜியின் ஆட்சி ஏற்பட வேண்டும் என்று நாம் சொல்கிறோம். ஆகையால் வரப்போகும் பொதுத் தேர்தலில் பொதுமக்கள் காங்கிரஸ் சின்னம் போட்ட இரட்டை மாட்டுச் சித்திரப் பெட்டியில் தங்கள் வோட்டுகளைப் போட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

# ரேடியோலிங்கம்ஸ்

## யாழ்ப்பாணத்தின்

### தலைசிறந்த

## ரேடியோ

### வியாபாரிகள்



எம்மிடம் செனித், பிலிப்ஸ், எச். எம். வி., பர்கூசன், பை, மார்க்கோனி, பெரக் முதலிய புகழ்பெற்ற ரேடியோக்களும் ரேடியோகிராமுகளும் வெவ்வேறு நபர்களுடைய விருப்பங்களுக்கும் வசதிகளுக்கும் ஏற்ற மாதிரிகளில் பல விலைகளிலும் இருக்கின்றன. கிராமபோன் பெட்டிகள், மின்சார தளவாடங்கள் முதலியவைகளும் எம்மிடம் கைவசம் இருக்கின்றன.

○●○

**உங்கள் தேவைக்கு எம்மிடம் வந்து பாருங்கள்!**

---

# ரேடியோலிங்கம்ஸ்

**மெயின் ஸ்றீட் (பறங்கித் தெரு), யாழ்ப்பாணம்**

கொழும்பு காரியாலயம்: **252, காலி ரோடு, வெள்ளவத்தை**




## 8

சொந்தமேது பந்தமேது சிந்திப்பாய்
விந்தையே யனைத்தும் சிந்தித்தாயேல்
மனைவியார் மகனார் நீயுந்தானார்
அனைத்துமே மாயையென் அண்ணே
குலமேது ஊரேது உயிருக்கு?

* * *

காதே காந்தா கஸ்தே புத்ர:
ஸம்ஸாரோ யமதீவ விசித்ர:
கஸ்யத்வம் க:குத ஆயாத:
தத்வம் சிந்தய ததிதம் ப்ராத:

நீ காதலிக்கும் மனைவி என்பவளுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்? மகன் என்று அளவிலா அன்பு செலுத்துகிறாயே அவன் யார்? உலக வாழ்க்கையெல்லாம் மிக விசித்திரம். நீ யாருடைய சொத்து? எங்கிருந்து வந்தாய்? முன் எங்கிருந்தாய்? நீயாகவே உண்டானாயா? நீ அன்பு செலுத்திக் கவலைப்படும் உயிர்களுக்கும் உனக்கும் என்ன பிணைப்பு? ஏன் இந்தக் கவலை? ஏன் இந்தப் பற்று? இதைக் கொஞ்சம் யோசித்துப் பார். இதையெல்லாம் கவனித்துச் சிந்தித்தாயானால் மோகங்கள் தீரும். சாந்த மடைவாய். அழியும் உடலையும் அழியா உயிரையும் ஒன்றென்று எண்ணிப் பற்றுக்களைப் பற்றிக்கொண்டு மாயையில் வருந்தித் துயரப்படாதே. காலத்தை வீண் சிந்தனைகளில் செலுத்தித் துன்பப்படாதே.

---

का ते कान्ता कस्ते पुत्रः
संसारोऽयमतीव विचित्रः ।
कस्य त्वं कः कुत आयातः
तत्त्वं चिन्तय तदिदं भ्रातः ॥

இந்த உலகம் அதிக 'விசித்திரம்' என்கிறார் ஆச்சாரியர். விசித்திரம் என்றால் உண்மை விளங்காத ரகசியமும் அதனுடன் அழகும் அற்புதமும் கலந்த பான்மை. வியப்புக்குரிய அழகும் ரகசியமும் பல நிறங்கள் சேர்ந்து கண்ணைக் கவரும் பொருளாக விளங்குகிறது இந்த உலகம். அழகுக்குக் குறைவில்லை. ஆனால் நிலையற்றது.

## 9

நல்லவர்களோடு கூடி வாழ்ந்தால் உள்ளத்தில் ஆசையும் பற்றும் நீக்கிக் கொள்ளும் பயிற்சிக்கு இடமுண்டாகும். சகவாசத்தின் சக்தி அனைவரும் அறிவார். அது உபதேசத்தைக் காட்டிலும் மிகச் சக்தி வாய்ந்தது. சகவாசத்தின் பயனாக சாந்தமும் நடுநிலையும் தோன்றும். ஆசையும் பற்றும் குறையக் குறைய உயிரைக் கவர்ந்து நிற்கும் மோகம் குறையும். இது நல்லது, இது பொல்லாதது, இது மேன்மை, இது தாழ்மை, என்று காணுவதற்குத் தடையாக நிற்பது மோகம். பொய்யும் உண்மையும் மாறாக உணரும் நிலைக்கு மோகம் என்று பெயர். ஆசையும் பற்றும் இந்த மயக்கத்தை உண்டாக்குகின்றன. அந்தக் குற்றம், குறையக் குறைய மயக்கம் தெளியும். மயக்கம் முற்றிலும் தீர்ந்தால் சித்தம் சஞ்சலப்பட்டு அலையாமல் நிலைபெற்று நிற்கும். சித்தம் நிலையில் நின்றால் தானாகவே உள்ளம் தூய்மையடைந்து விடும். தூய்மையே சிவம் என்பது. அந்த நிலையடைந்தால் அதுவே வீடுபேறு. ஜீவன் முக்தி. "பந்த மறுத்தெனை யாண்டு பரிசற என் துரிசு மறுத்து அந்தம் எனக்கு அருளியவாறு"

என்று மாணிக்கவாசகர் பாடிய "அந்தம்" என்பதே ஜீவன் முக்தி.

நல்லது நல்லது நல்லவர் நேசம்
அதனால் குறையும் உன் பாசம்.
பாசம் குறையவே நீரும் வர வர மோகம்
மோகம் போயின் யோகத்தில்
நிற்கும் உன் சித்தம்.
அந்த நிலை யடைந்தால்
அதுவே உயிருடன் வீடு.

***

ஸத் ஸங்கத்வே நிஸ் ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர் மோஹத்வம்
நிர்மோஹத்வே நிஸ்சல சித்தம்
நிஸ்சலசித்தே ஜீவன் முக்தி.

---

सत्सङ्गत्वे निःसङ्गत्वम्
निःसङ्गत्वे निर्मोहत्वम् ।
निर्मोहत्वे निश्चलचित्तम्
निश्चलचित्ते जीवन्मुक्तिः ॥

பாசம் குறைந்து, அதன்மேல் மோகம் குறைந்து அதன் பயனாக சம நிலை அடைந்த பிறகு உள்ளம் சிவமாகும். ஒன்றன்பின் ஒன்று வளரும். தீயதும் இவ்வாறே, நல்லதும் இவ்வாறே. முடிவில் வீடுபெற வேண்டின் முதலில் பக்தர்கள் சகவாசம் செய்ய வேண்டும். நாஸ்திகர் சகவாசத்தை விட வேண்டும். பக்தி மார்க்கத்தில் இல்லாதவர்களை இகழ வேண்டியதில்லை; வெறுத்தலும் கூடாது. ஆண்டவனுடைய அருள் அவர்களுக்கும் கிட்ட வேண்டும். 'பக்தியை எனக்குத் தந்தானே அத்தன்' என்று மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்து வாதவூர் பெருமான் போல் உள்ளம் கரைந்து உருக வேண்டும். மற்றவர்கள் பக்தி யடையவில்லையே என்று துயரப்பட வேண்டும். வெறுத்தல் அகம்பாவமாகும். ஆண்டவன் அருளிய பக்தி அகம்பாவம் கொண்டால் கரைந்து போகும்.

# ஐந்து வருஷ சாதனைகள்—1

பாரதநாடு சுதந்திரம் பெற்றபின் மற்ற மாகாணங்களைப் போல் சென்னையிலும் காங்கிரஸ் சர்க்கார் நிர்வாகம் நடந்து வருகிறது. இந்த ஐந்து வருஷ காலமாகச் சென்னைச் சர்க்கார் நிர்வாகத்தில் கண்ட குறைபாடுகளை நாம் அவ்வப்போது குறிப்பிட்டு வந்திருக்கிறோம். இதே ஐந்து ஆண்டு காலத்தில் எத்தனையோ நல்ல காரியங்களையும் சென்னை சர்க்கார் சாதித்திருக்கிறார்கள். அவற்றைப் பொது மக்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறோம். முதலில், இம் மாகாணத்துக் கல்வித் துறையில் என்னென்ன அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன என்பதைப் பார்க்கலாம்:

**ஆரம்பக் கல்வி:**

| வருஷம் | பாடசாலைகள் | மாணவர், மாணவிகள் | சர்க்கார் செலவு |
|---|---|---|---|
| 1946 | 36,148 | 32,45,000 | ரூ. 6 கோடி |
| 1951 | 39.000 | 40.60.000 | ரூ. 9 கோடி |

**மத்தியதரக் கல்வி:**

| | | | |
|---|---|---|---|
| 1946 | 599 (ஆடவர்களுக்கு) | 2,82,000 | |
| 1946 | 146 (பெண்களுக்கு) | 65,000 | ரூ. 2,49,000 |
| 1951 | 1133 (ஆடவர்களுக்கு) | 4.79.000 | |
| 1951 | 224 (பெண்களுக்கு) | 1.03.000 | ரூ. 3.94.000 |

**கலாசாலைக் கல்வி:**

| ஆடவர்களுக்கு | கல்லூரிகள் | மாணவர்கள் | செலவு |
|---|---|---|---|
| 1946 | 46 | 25,232 | ரூ. 62,86,897 |
| 1951 | 69 | 37.285 | ரூ. 75.20.644 |
| பெண்களுக்கு | | | |
| 1946 | 6 | 2,869 | ரூ. 6,84,286 |
| 1951 | 12 | 4.242 | ரூ. 7.90.729 |

**தொழிற் கல்வி:** (வைத்தியம், என்ஜினியரிங், விவசாயம், சட்டம் முதலிய கல்லூரிகள்)

| | | | |
|---|---|---|---|
| 1946 | | 19 | ரூ. 36,67,474 |
| 1951 | | 27 | ரூ. 42.30.000 |
| ,, | பெண்களுக்கு | 5 | ரூ. 5.60.000 |

**வயதுவந்தோர் கல்வி:**

| | பாடசாலைகள் | கல்வி கற்கும் வயது வந்தோர் | செலவு |
|---|---|---|---|
| 1946 | 9 | 400 | ரூ. 4591 |
| 1951 | 1678 | 34.256 | ரூ. 12.00.000 |

வருகிறது!

ஜுபிடரின்

# கைதி

டைரக்ஷன்: S.பாலசந்தர். ஸ்டுடியோ: சென்ட்ரல்








அந்த வீட்டில் அவனைத் தவிர வேறு யாருமில்லை. அவனும் பிறர் கண்ணில் பட்டதில்லை. அவன் வீட்டை விட்டு வெளி வருவதே கிடையாது. அப்படி வந்தாலும் இரவு பத்து மணிக்கு மேல்தான் சற்றுக் காலார நடந்து போவான். அந்த வேளையை அவன் தேர்ந்தெடுத்ததற்குக் காரணமே பிறர் கண்ணில் அவன் படக்கூடாது என்பதுதான்.

ஏன் அவ்விதம் அவன் இருந்தான் என்பது அவனைத் தவிர யாருக்குமே தெரியாது. அவனுக்கு அந்த ஊரில் நண்பர்கள் கிடையாது; உற்றார் உறவினர் கிடையாது. ஆகவே, அவன் வீட்டை எட்டிப் பார்த்தவர்கள் யாரும் கிடையாது!

இப்படியிருந்த வீட்டில் அன்று ஒரு பிராணி எட்டிப் பார்த்தது. தன் வாலை ஆட்டிக் கொண்டு, நாக்கை நீட்டிக் கொண்டு எட்டிப் பார்த்தது. "சீ போ" என்று மற்ற வீடுகளில் எல்லாம் எதிரொலிக்க, இந்த வீட்டில் இதற்கு நேர்மாறான வரவேற்பு கிடைத்தது.

"என்ன கால பைரவரே, பசியாயிருக்கிறதா? இந்தா!" என்று சொல்லித் தன் வட்டிலிலிருந்து கொஞ்சம் சோற்றை எடுத்துப் போட்டான் அவன். ஆம், அப்போதுதான் அவன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

அவ்வளவுதான்! அந்த நாய் இன்னும் வாலைக் குழைக்கத் தொடங்கியது. தன் நன்றியெல்லாம் அவன்மீது சொரியத் தொடங்கியது. உலகைப் பார்க்கக் கூசிய அவன்மீது தன் அன்பைச் சொரிந்தது. அவன் இரவு பத்துமணிக்கு வீட்டை விட்டு வெளியே சென்றால் அதுவும் கூடவே உறுதுணையாகச் சென்றது. இரவும் பகலும் வீட்டைக் காவல் புரிந்தது. அவன் தோட்டத்துக்குள் ஆடு, மாடு எது நுழைந்தாலும் குரைத்து விரட்டி யடித்தது.

நாய் அவனிடம் தஞ்சம் புகுந்து பத்து நாள் ஆயிற்று. அவன் வாழ்விலும் ஒரு புது மலர்ச்சி ஏற்பட்டது போல் உணர்ந்தான். ஆனால் அந்த மலர்ச்சியும் அதிக நாள் நீடிக்காதோ என்ற ஐயம் ஏற்பட்டது.

*

அவனிருந்த ஊரிலிருந்து பத்து மைல் தூரத்திலிருந்தது சிறுகுடிக் கிராமம். அந்த ஊரின் மணியக்காரர் முத்துக்குமார் பிள்ளையின் மகள் தேவானை ஒரு நாயை மிக்க அருமையாக வளர்த்து வந்தாள். அந்த நாய்க்குச் செல்லி என்று பெயர் வைத்திருந்தாள். எப்போது பார்த்தாலும் அவள் தன் வீட்டிலேயே கட்டிப் போட்டிருந்தாள். தினம் தேவானை ஆற்றுக்குக் குளிக்கப் போவாள். கூட நாயையும் அழைத்துப் போவாள். செல்லிக்கும் காலார நடந்து விட்டு வர அப்போதுதான் சந்தர்ப்பம். மற்ற வேளையெல்லாம் செல்லிக்குச் சிறைவாசம்தான்.

செல்லிக்குத் தன் எஜமானியிடம் எவ்வளவோ அன்புதான் என்றாலும் இந்தச் சிறைவாசம் அதற்குச் சற்றும் பிடிக்கவில்லை. ஒருநாள் அதற்கு வீர விடுதலை உணர்ச்சி தோன்றி, அந்தக் கட்டை அறுத்துக்கொண்டு கிளம்பி விட்டது; தன் கால் போன போக்கில் நடந்தது. செல்லி அப்படி நடந்து

சென்று ஆரம்பத்தில் குறிப்பிட்ட நண்பன் வீட்டை அடைந்தது!

இப்பொழுது அந்த நண்பனைப் பற்றியும் நாலு வார்த்தை சொல்ல வேண்டியது ரொம்பவும் அவசியம்.

அவனும் சிறுகுடி கிராமத்தைச் சேர்ந்தவன்தான். ஆனால் அவன் 42-ம் வருஷம் பட்டாளத்தில் சேர்ந்து யுத்தத்துக்குச் சென்றான். அந்த யுத்தத்தில் சொல்லொணா இடையூறுகளுக்கு உள்ளானான். முகத்தில் குண்டுக் காயங்கள் ஏற்பட்டு, முகத்தைப் பார்க்க முடியாமல் அவ்வளவு விகாரமாகப் போய்விட்டது. இடது கன்னத்திலும் வலது கன்னத்திலும் தோல் பிய்ந்து பார்க்கச் சகிக்காத வடுக்களுடன் ராணுவ ஆஸ்பத்திரியிலிருந்து வெளிப்பட்டான். கண்ணாடியில் தன் முகத்தைப் பார்க்கும்போதே அவனுக்கே பயமும் பீதியும் ஏற்பட்டது! இவ்வளவு விகார முகத்துடன் சொந்த ஊருக்குத் திரும்ப அவனுக்கு அவமானமாக இருந்தது. ஆகவே, அவன் தன் சொந்த ஊரை விட்டுப் பத்து மைல் தூரத்திலிருந்த புதுக்குடிக்கு வந்து சேர்ந்தான்.

புதுக்குடிக் கிராமத்து வாசிகள் அத்தனை பேரும் அவனுக்கு அறிமுகமாகாதவர்கள்தான். எனினும் அவர்கள் எதிரில் தனது கோர முகத்தைக் காண்பிக்க விரும்பவில்லை. மேலும், பட்டப்பகலில் சின்னஞ் சிறுவர்கள் தனது முகத்தைப் பார்த்தால் பீதி கொள்வார்களோ என்று பயந்தான். அப்படிப் பயந்து அவர்கள் ஓடினார்களானால் அதைவிடத் தனக்கு வருத்தத்தை, அல்ல—நரக வேதனையை அளிக்கக் கூடியது வேறொன்றுமில்லை என்று தீர்மானித்தான். அதனால்தான் அவன் தன் குடிசையை விட்டே வெளியேறாமல் இராக் காலங்களில் மட்டும் வெளியே போய் வந்தான்.

★

புதுக்குடிக் கிராமத்தில் ஏதோ விசேஷம் என்று தேவானையும் அவள் வீட்டாரும் வந்திருந்தார்கள். விசேஷத்தின் குதூகலத்தில் மற்றவர்கள் மூழ்கி யிருந்தாலும், தேவானைக்குச் சிந்தனை யெல்லாம் செல்வியின்மீதே இருந்தது.

அன்று மத்தியானம் சாப்பாட்டுக்கு மேல் தேவானை தன் வயது ஒத்த பெண்களுடன் ஊர் சுற்றிவரப் புறப்பட்டாள். வழியில் ஒரு வீட்டில் சற்றுத் தயங்கினாள். காரணம் அந்த வீட்டில் ஒரு நாய் நின்று கொண்டிருந்தது! அது அசல் செல்வியைப் போலவே இருந்தது. அந்த நாயே செல்வியாக இருந்த போது, செல்வியைப் போல இருந்ததில் அதிசயம் என்ன? ஆகவே, தேவானை, "செல்வி" என்று கூப்பிட்டாள். உடனே அந்தக் குரலைக் கேட்டு விழுந்தடித்துக் கொண்டு ஓடிவந்தது செல்வி.

இப்பொழுது சற்றும் சந்தேகமில்லாமல் இது தன் செல்விதான் என்ற நிச்சயம் ஏற்பட்டுவிட்டது தேவானைக்கு. அளவுகடந்த


## தி பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு லி-ட்.

(இந்தியாவில் இணைக்கப்பட்டது)

**நெ. 3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, மதராஸ் - 5**

போன்: 85834] :: [தந்தி விலாசம்: "EVERMANS"

**மாதச் சீட்டு**

**ஆரம்பிக்கும் தேதி 12-1-52 ★ ஏலத் தேதி 19-1-52**

10-12-51 ஆரம்பமான எங்கள் சீட்டுக்கு தேவைக்கு மேற்பட்ட சந்தாதாரர்கள் சேர்ந்திருக்கிறபடியால் நேயர்களின் சௌகரியத்திற்காக இன்னொரு புதிய சீட்டு ஆரம்பித்திருப்பதை மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறோம். இப் புதிய சீட்டு 12-1-52 அன்று ஆரம்பமாகிறது.

சீட்டு விவரம் வருமாறு:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| B | கிளாஸ் டிக்கெட், | ரூ. | 2500/- | மாதம் | ரூ. | 100/- |
| C | ,, | ,, | ரூ. 1250/- | ,, | ரூ. | 50/- |
| D | ,, | ,, | ரூ. 625/- | ,, | ரூ. | 25/- |
| E | ,, | ,, | ரூ. 500/- | ,, | ரூ. | 20/- |
| F | ,, | ,, | ரூ. 375/- | ,, | ரூ. | 15/- |

ரூ. 20க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்கிகள்மேல் செக்குகள் பெற்றுக்கொள்கிறோம். இச்சீட்டில் சேர விரும்புபவர்கள் முழு விவரத்திற்கும் எங்களுக்கு எழுதி சீக்கிரம் இந்த சீட்டில் சேர்ந்து கொள்ளவும்.

(போர்டாரின் உத்தரவுபடி)

எம். வி. சுப்ரமணியம்,
மானேஜிங் டைரக்டர்

சந்தோஷமும் ஏற்பட்டது! அடுத்த கணம், "செல்வி! என்னை ஏமாற்றிவிட்டு அல்லவா போய் விட்டாய்! வா, வா! உனக்குச் சரியான வழி வைக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டு அங்கே கிடந்த ஒரு கயிற்றை அதன் கழுத்தில் கட்டி அழைத்துக் கொண்டு போனான்.

நாய் அகப்பட்ட சந்தோஷத்தைத் தன் பெற்றோர்களிடம் தெரிவித்து இன்னும் மகிழ்ந்தான். நாய்கூட முதலில் தேவானையைப் பார்க்கக் கொடுத்து வைத்ததில் பெரிதும் மகிழ்ந்தது. ஆனால் நேரம் ஆக ஆக, செல்வியின் சந்தோஷம் குறையத் தொடங்கியது. புது எஜமானனிடம் ஓடவேண்டும் என்று துடித்தது. நாய் நன்றியுள்ள பிராணி யல்லவா? புது எஜமானனின் உப்பையும் அது தின்றிருக்கிற தல்லவா? இத்தனை நாழிகைக்கு 'அவர் சாப்பிட்டிருப்பார்' என்று எண்ணியது. இரவு எட்டு மணி ஆயிற்று. 'இன்னும் ஒரு மணி நேரத்தில் அவர் உலாவப் புறப்படுவார். அவருடன் கூடத் துணைக்கு யார் போவார்கள்?' என்று எண்ணியது. அப்படி எண்ணிய மாத்திரத்திலேயே அதற்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அவ்வளவுதான்; அதற்கு எங்கிருந்து பலம் வந்ததோ தெரியவில்லை. தன் கட்டை அவிழ்த்துக் கொண்டு அவனை நோக்கி ஓடியது.


# சர்க்கார் பரீட்சை

○●○

நிறமை வாய்ந்த L. T. ஆசிரியர்களால் 1952-ம் வருட மேற்கண்ட சர்க்கார் பரீட்சைகளுக்குண்டான பாடங்களை எளிய நடையில் பல வாரப் பாடங்களாகவும், அவைகளுக்குண்டான கேள்வியும்—பதிலுமாகவும் தயாரிக்கப்பட்டுள்ள இவ்வாரப் பயிற்சிப் பாடங்களைப் படித்தாலே பரீட்சையின் வெற்றிக்கு உத்திரவாதம்.

*(1)* மெட்ரிகுலேஷன் பரீட்சைக்குண்டான 15 வாரப் பாடங்கள் விலை ரூ. 12. *(2)* S. S. L. C. 12 வாரப் பாடங்கள் ரூ. 9. *(3)* E. S. L. C. 24 வாரப் பாடங்கள் ரூ. 5. *(4)* ஹைந்தி நேசவு (லோயர்) 20 வாரப் பாடங்கள் ரூ. 6 *(5)* ஹிந்தி (பிராத்மிக்) 15 வாரப் பாடங்கள் ரூ. 4. *(6)* பேஸிக் ஆங்கிலம் (ஆங்கிலம் ஆரம்ப முதல் நான்காம் பாரத்திற்குச் சமமான ஆங்கில பாடங்கள் அடங்கியவை) 20 வாரப் பாடங்கள் ரூ. 4-8-0. *(7)* ஹிந்தி பிராத்மிக் தமிழ் மொழி பெயர்ப்பு புத்தகம் 4க்கு ரூ. 1.

முன் பணம் தேவையில்லை. பாடங்களை வி.பி. மூலம் உடனுக்குடன் அனுப்பி வைக்கப்படும்.

30 - 12 - 51க்கு மேல் வரும் ஆர்டர்கள் கவனம் பெறா.

○●○

ஸ்ரீ லக்ஷ்மி டுடோரியல் இன்ஸ்டியூட்
புவனகிரி P. O. (தென்னாற்காடு ஜில்லா)


அப்போதுதான் அவன் வீட்டை விட்டுப் புறப்படப் பிரயத்தனம் பண்ணிக் கொண்டிருந்தான். நாயைக் கண்டவுடன் "வந்து விட்டாயா? எங்கே ரொம்ப நாழிகையாக உன்னைக் காணவில்லை?" என்று கூறிக் கொண்டே உள்ளே போனான். ஒரு வட்டிலில் சோறு கொண்டு வந்து வைத்தான். நாய் ஆவலுடன் அதைத் தின்றது. அதையே அவன் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்போது, "ஏய், செல்வி!" என்று வாசல் புறமிருந்து ஒரு குரல் வந்தது. அது தேவானையின் குரல்தான் என்று சொல்ல வேண்டிய அவசிய மிராது என்று நினைக்கிறேன். தான் கட்டிப் போட்ட இடத்தில் நாயைக் காணவில்லை என்றதும் அதைத் தேடிக் கொண்டு புறப்பட்டான். முதலில் தான் பார்த்த இடத்தில் தேட வேண்டும் என்று இங்கு வந்தான். அவன் நினைத்தது சரியாகப் போய்விட்டது.

தேவானையின் குரலைக் கேட்டதும் நாய் அவன் அருகில் ஓடியது. அவனும் அவனை ஏறிட்டுப் பார்த்தான். "என் நாயை இத்தனைநாள் காப்பாற்றி வந்தமைக்கு என் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்றான்.

"அது உங்கள் நாயா? அப்படியானால் நானல்லவா உங்களுக்கு நன்றி சொல்லிக் கொள்ள வேண்டும். உங்கள் நாய் வந்ததிலிருந்து என் வாழ்வே புத்துயிர் பெற்றது! இந்த உலகில் உற்றார், உறவினர், நண்பர் எல்லாம் என்னைத் தவிர யாருமில்லை என்றிருந்த எனக்கு உங்கள் நாய் எல்லாமாக இருந்தது! இத்தனை நாள் உங்கள் நாயை என்னிடம் விட்டு வைத்ததற்கு என் மனப்பூர்வமான நன்றி. ஆனால் ஒரு வேண்டுகோள்" என்றான்.

"என்ன?" என்றான்.

"அந்த நாயை, செல்வியை என்க்கே கொடுத்து விட்டீர்களானால் ரொம்பவும் சந்தோஷப் படுவேன்" என்றான்.

"பேஷாக! நீங்களே வைத்துக் கொள்ளுங்களேன்! — செல்வி, இந்தா, போ அவரண்டை" என்றான் தேவானை. செல்வியும் அவனை விட்டு, அவனை நோக்கி வாலைக் குழைத்துக் கொண்டு ஓடியது.

"சரி, நான் வருகிறேன்" என்று சொல்லி விட்டுத் தேவானை நகர்ந்தான்.

அவனையே பார்த்துக் கொண்டிருந்த அவன், "நல்ல வேளை, தேவானை என்னை அடையாளம் கண்டு கொள்ளவில்லை" என்று தன் மனதுக்குள் நினைத்து மகிழ்ந்தான்.

"நல்ல வேளை, அத்தானுக்கு என்னை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை! போகட்டும், என் அன்பின் அடையாளமாக செல்வியையாவது கொடுக்க முடிந்ததே!" என்று எண்ணி மனம் பூரித்தான் தேவானை.

# பூம் பூம்!

சாமா





கிட்டுவுக்கு வயது ஐந்து. வீட்டில் அவன் மிகவும் செல்வமாக வளர்ந்து வந்தான். அவன் எது கேட்டாலும் அவன் தகப்பனார் இல்லை என்றே சொல்வதில்லை.

ஒருநாள் ஒரு பெரிய ஊதல் ஒன்று வாங்கிக் கிட்டுவிடம் கொடுத்தார், கிட்டுவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. நாள் பூராவும் பூம், பூம் என்று ஊதிக் கொண்டிருந்தான். அந்தச் சப்தம் தாங்க முடியாமல் வீட்டில் எல்லோரும் தவித்தார்கள். காதைப் பொத்திக் கொண்டார்கள். கடைசியில் கிட்டுவின் தகப்பனார் ஊதலைப் பிடுங்கி ஒரு 'பீரோ'வின் மேல் வைத்துவிட்டார்.

ஒரு நாள் இரவு எல்லாரும் நன்றாகத் தூங்கிக்கொண்டிருக்கும்போது அவர்கள் வீட்டில் ஒரு திருடன் புகுந்துவிட்டான். கிட்டு அப்போது விழித்துக் கொண்டுவிட்டான். திருடன் "டேய், ஏதேனும் சத்தம் போட்டே உன்னைக் கொன்று விடுவேன்" என்றான். கிட்டு உடனே "ஏனய்யா பயப்படுகிறீர்! திருடத்தானே வந்திருக்கிறீர். என்கூட வாரும்!" என்று அவனை அழைத்துப்போய் நகை, வெள்ளிப் பாத்திரம் முதலியவைகளைக் காட்டினான். திருடன் ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டான். "இதோ இந்த பீரோவுக்குச் சாவி கெட்டுப் போய்விட்டது. இதைத் திறந்து அதில் இருக்கும் புடவைகளை எடுத்துக்கொள்" என்றான். மிகவும் சிரமப்பட்டு பீரோவைத் திருடன் சப்தம் போடாமல் திறந்தான். எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டான்.

"எனக்கு ஒரு உபகாரம் செய்கிறாயா! பீரோவின் மேல் என் ஊதல் இருக்கிறது. அப்பா எடுத்துக் கொடுக்க மாட்டேன் என்கிறார்" என்று சொன்னதும் திருடன் அதை எடுத்துக் கிட்டுவிடம் கொடுத்தான். உடனே கிட்டு தன் பலம் கொண்ட மட்டும் ஊதலை ஊதினான். அதனால் எல்லோரும் எழுந்து விட்டார்கள். திருடன் ஓடுவதைப் பார்த்து எல்லோரும் ஓடிப் பிடித்துக் கொண்டார்கள். கிட்டுவின் புத்தியை எல்லோரும் பாராட்டினார்கள். உடனே கிட்டு "அப்பா, அந்த பீரோ திறக்க முடியாமல் இருந்ததே அதையும் அவனிடம் சொல்லித் திறந்துவிட்டேன்" என்று சொன்னபோது எல்லோரும் சிரித்தார்கள். திருடனைப் போலீஸுக்கு அனுப்பினார்கள்.







# பாலுவின் ஸைக்கிள்

பி. எஸ். மணி

**பா**லு பணக்கார வீட்டுப் பையன். அவன் தகப்பனார் அவனுக்குப் புத்தம் புதிய சைக்கிள் ஒன்று வாங்கிக் கொடுத்திருந்தார். அந்த சைக்கிள் வாங்கி ஒரு மாதம் கூட ஆகவில்லை. அதற்குள் அதில் தூசியும், மண்ணும் படிந்து பழைய சைக்கிளைப் போல் காட்சி யளித்தது. பாலுவோ சோம்பேறி. அதைத் துடைத்துப் பாதுகாக்க அவனுக்கு மனம் வருமா, என்ன?

அன்று ஞாயிற்றுக்கிழமை. பாலுவின் தகப்பனார் அவனுடைய தூசி படர்ந்த சைக்கிளைப் பார்த்ததும் கோபங் கொண்டார்.

"ஏண்டா! உனக்குச் சைக்கிள் வாங்கிக் கொடுத்து ஒரு மாதங்கூட ஆகவில்லையே? அதற்குள் அதில் எவ்வளவு தூசியும் தூப்பட்டையுமா யிருக்கிறது. பார்! அதைத் துடைத்து நன்றாக வைத்துக் கொள்வதற்கு என்ன?" என்று ஆத்திரத்துடன் கேட்டார்.

"இல்லை, அப்பா! அதைத் துடைத்து வைக்க நேரமில்லை......" என்று இழுத்தான்.

"போடா, சோம்பேறி! ஊர் சுற்றுவதற்குப் பொழுதிருக்கிறதா? இன்று நீ சைக்கிளை நன்றாகத் துடைத்து விட்டுத்தான் வெளியில் செல்ல வேண்டும்" என்று கூறிவிட்டு அங்கிருந்து நகர்ந்து விட்டார்.

அன்று நாலு மணிக்கு அவன் 'புட்பால் மாட்ச்'க்குப் போகவேண்டும். அவனும் அந்த மாட்சில் விளையாடப் போகிறான். ஆனால் தகப்பனாரின் கட்டளையை நிறைவேற்றாமல் எப்படிப் போக முடியும்? என்ன செய்வதென்று தெரியாமல் உட்கார்ந்திருந்தான்.

மணி மூன்றடித்தது. பாலு இருந்த இடத்திலேயே உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன் நண்பன் ரகு. "பாலு! நீ மாட்சக்கு வரவில்லையா? நேரமாகி விட்டதே?" என்று கேட்டுக் கொண்டே வந்தான்.

"போடா! மாட்சாவது, கீட்சாவது! அப்பா இன்றைக்கு சைக்கிளை நன்றாகத் துடைத்து விட்டுத்தான் வெளியில் போக வேண்டும் என்று கண்டிப்பாகக் கட்டளை யிட்டுவிட்டார். நான் எப்படி மாட்சக்கு வரமுடியும்?" என்று கூறினான் பாலு.

"சரி! அப்படியானால் சைக்கிளைத் துடைத்துவிட்டுச் சீக்கிரம் புறப்படேன்!"

"போடா? அதைத் துடைக்கவேணுமானால் குறைந்தது இரண்டு மணி நேரமாவது ஆகும். என்னால் அது முடியாத காரியம்!" என்று தனது சோம்பேறித்தனத்தை வெளியிட்டான் பாலு.

"அப்படியானால் நீ மாட்சுக்கு வரலையா?"

"டேய் ரகு! எனக்காக இந்தச் சைக்கிளைத் துடைத்து வைக்க மாட்டாயா? அப்படிச் செய்தால் இன்னொரு நாள் உனக்குச் சைக்கிள் ஓட்டத் தருவேன். என்ன?" என்று கேட்டான் பாலு.

"சரி! நீ மாட்சுக்குப் போ. நானும் சீக்கிரம் சைக்கிளைத் துடைத்துவிட்டு ஓடிவந்து விடுகிறேன். என்றைக்காவது ஒரு நாள் நீ எனக்குச் சைக்கிள் ஓட்டத் தரவேண்டும்!" என்று கேட்டுக் கொண்டான் ரகு.

**ர**கு ஏழைப் பையன். அவனுக்குச் சைக்கிள் விடுவதில் ஆசை அதிகம். அந்த ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக அவன் தான் 'மாட்சு' ஆடுவதையும் மறந்து அந்தப் பணியில் ஈடுபடச் சம்மதித்து விட்டான்.

பாலுவுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. தன் வேலை தன்னை விட்டுப் பிரிந்து விடுதலை கிடைத்ததில் அவனுக்கு மகிழ்ச்சி இருக்காதா, என்ன?

"டேய் ரகு! நான் போகிறேன். நீ சைக்கிளைத் துடைத்து வைத்துவிட்டு நேராக மைதானத்துக்கு வந்துவிடு, என்ன?" என்று சந்தோஷத்தில் கூறி விட்டுக் குதித்துக் கொண்டே மைதானத்தை நோக்கி ஓடி வந்தான் பாலு.

ரகு உரத்த குரலில், "பாலு! நான் மாட்சு ஆரம்பிப்பதற்குள் விளையாட வந்து விடுகிறேன் என்று சொல்லு. மறந்து விடாதே!" என்று எச்சரித்தான்.

பாலு மைதானத்தை யடைந்தபோது மாட்சு ஆரம்பிப்பதற்கு வேண்டிய நேரமாகிவிட்டது. அவனுடைய நண்பர்கள் எல்லாம் அவனைப் புடை சூழ்ந்து கொண்டு, "ஏண்டா, பழி! இவ்வளவு 'லேட்'? மாட்சு ஆரம்பிக்கிற நேரத்துக்கு வருகிறாயே?

ரகு எங்கே? அவன் மாட்சுக்கு வரமாட்டானா?" என்று கேட்டார்கள்.

"அவன் மாட்சுக்கு வரமாட்டான். நாம் யாரையாவது போட்டுக் கொள்ள வேண்டியதுதான்" என்று கூறினான் பாலு, தன் நண்பன் எச்சரித்ததையும் மறந்து.

மாட்சு மும்முரமாக நடந்தது. பாலு ஆடிய கட்சி ஜெயித்து விட்டது. நல்ல விளையாட்டுக்காரனான ரகு இல்லாமலே தான் விளையாடி ஜெயித்ததில் பாலுவுக்குப் பேரானந்தம். அந்த வெற்றியைக் கண்டு அவன் தலைகால் தெரியாமல் குதித்தான். வெற்றிக் களிப்பில் ஆடிக்கொண்டே மகிழ்ச்சியுடன் வீட்டை நோக்கி நடந்து வந்தான்.

பாதிவழி வந்ததும் அவன் எதிரே சைக்கிளில் வேகமாக வந்து கொண்டிருந்தான் ரகு. சைக்கிளைப் பார்த்தான். அவனுடைய சைக்கிளில்தான் ரகு வந்து கொண்டிருந்தான். அவனுக்குக் கோபமும் ஆத்திரமும் தாங்க முடியவில்லை. 'என்னைக் கேட்காமலேயே சைக்கிளை எடுத்துக் கொண்டு வந்து விட்டானே? இவனுக்கு எவ்வளவு தைரியம்?' என்று எண்ணினான். உடனே அவன் தன் சைக்கிளைப் பிடித்து நிறுத்துவதற்காக ஓடினான். "டேய், ரகு! என் சைக்கிளை எதற்காக என்னைக் கேட்காமல் எடுத்தாய்? உன் முதுகுத் தோலை உரித்து விடுகிறேன், பார்!" என்று கத்திக் கொண்டே பின் தொடர்ந்தான். பாலுவினால் சைக்கிளைப் பிடித்து நிறுத்த முடியவில்லை. சைக்கிள் கனவேகமாகப் பறந்தது. உடனே பாலு என்ன செய்தான், தெரியுமா? கோபத்தில் தன் காலிலிருந்த செருப்பைக் கழற்றி வேகமாக வீசி எறிந்தான். அந்தச் செருப்பு ரகுவின் முகத்தைப் போய்ப் பலமாகத் தாக்கியது. அப்படி இருந்தும் ரகு சைக்கிளை நிறுத்தாமல் கனவேகமாக விட்டுக் கொண்டு சென்றான். பாலு செய்த முயற்சி வீணாயிற்று. அவன் ஏமாற்றத்துடன் வீடு திரும்பினான். அவன் வழி நெடுக 'ரகு வீட்டுக்கு வரட்டும். உதை பிய்த்து விடுகிறேன்' என்று முனகிக்கொண்டே சென்றான்.

பாலு வீட்டை அடைந்ததும் அவன் அம்மா, "ஏண்டா, பாலு! எங்கே போய் விட்டாய்? உன் தங்கை மாடியிலிருந்து உருண்டு கீழே விழுந்து விட்டாள். பலத்த காயம் பட்டு விட்டது. டாக்டரை அழைத்து வர யாரும் இல்லை. நல்லவேளையாக உன் நண்பன் ரகு சைக்கிளைத் துடைத்துக்கொண்டிருந்தான். அவன்தான் சைக்கிளில் போய் டாக்டரை அழைத்து வந்தான்" என்றாள்.

"அம்மா! ரகு எங்கே? என் சைக்கிள் எங்கேயிருக்கிறது!" என்றான் பாலு.

"ரகுவை யாரோ வழியில் செருப்பை வீசியெறிந்து அவன் முகத்தில் காயப்படுத்தி விட்டானாம். அவன் அந்தக் காயத்துடனேயே டாக்டரை அழைத்து வந்திருக்கிறான். அவனும் உள்ளே படுத்திருக்கிறான்" என்று கூறினாள் அவன் தாயார்.

பாலுவுக்கு நெஞ்சு வெடித்து விடும்போல் இருந்தது. அவன் அம்மாவிடமும் அப்பாவிடமும் தன் தவறையெல்லாம் கூறி அழுது விட்டான். பாலு பிறகு ரகுவிடமும் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு மன்னிக்கும்படி வேண்டினான்.

ரகு செய்த உபகாரத்தை மெச்சிப் பாலுவின் தகப்பனார் அவனுக்குப் பாலுவுடைய சைக்கிளையே பரிசாக அளித்து விட்டார்.

---

## நீங்களும் வரையலாம்

பஸ் ஸ்டாண்டிலிருந்து வரைந்த படங்கள்.

புல்லாங்குழல் ஊதுபவர்

பறக்கும் கொக்கு.

போட்டிக் கதை



# புத்திர வாஞ்சை

ஆசிரியர் : சௌத்ரி

மொழி பெயர்ப்பு : 'வாஞ்சி'

மூலக்கதை : தெலுங்கு

"நமது கிராமத்தையும் கம்யூனிஸ்டுகள் சூறையாடப் போகிறார்களாமே; கிராமம் எங்கும் வதந்தியாக இருக்கிறதே" என்று பரபரப்புடன் சொல்லிக்கொண்டே வீரய்யா வீட்டுக்குள் நுழைந்தார். அவருடைய முகத்தில் கலக்கமும் பீதியும் தாண்டவமாடின.

வீரய்யாவுக்கு வயது ஐம்பதுக்கு மேல் இருக்கும். வேஷ்டியைக் கச்சமாகக் கட்டிக் கொண்டிருந்தார். சலவைக்குப் போடாததால் வேஷ்டியில் காவி ஏறி யிருந்தது. காவி ஏறிய வேஷ்டியும் பழைய அங்க வஸ்திரமும் உச்சிக் குடுமியும் அவர் நவீன நாகரிகத்தில் ஈடுபடாத கிராமவாசி என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன.

ராமய்யா வீரய்யாவின் ஏக புத்திரன். அவன் அப்போது நாற்காலியில் சாய்ந்து கொண்டு ஏதோ ஒரு புத்தகத்தை வாசித்துக் கொண்டிருந்தான். அவன் தகப்பனார் கூறியது அவன் காதில் சரியாக விழுந்ததாகவே தெரியவில்லை. அவருக்குப் பதிலாக 'ஓஹோ' என்று மாத்திரம் சொல்லி வைத்தான். அவனது குரலில் ஆச்சரியமோ, பரபரப்போ எதுவும் இல்லை. அவன் உள்ளூற சிரித்துக் கொண்டான். புத்தகத்தில் ஏதாவது ஹாஸ்யமான கட்டமாக இருக்கலாம்.

"கிராமம் முழுதும் ஒரே வதந்தியாக இருக்கிறது" என்றார் வீரய்யா மறுபடியும்.

ராமய்யா அப்போது தான் தலையைத் தூக்கித் தகப்பனாரைப் பார்த்தான். "என்ன வதந்தி!" என்று அலட்சியமாகக் கேட்டான்.

"நமது கிராமத்தின் மீதும் கம்யூனிஸ்டுகள் படையெடுக்கப் போகிறார்களாம்" என்று பீதி நிறைந்த குரலில் சொன்னார் அவன் தகப்பனார்.

"அவர்கள் நமது கிராமத்தின் மீது படையெடுப்பார்களா என்பது சந்தேகம் தான்" என்றான் ராமய்யா.

இருந்தாலும் அவன், சாதாரணமாகக்கவலையற்றிருக்கும் தன் தந்தையின் முகம் கவலையில் ஆழ்ந்திருப்பதை அறிந்து கொள்ளாமலில்லை. "வதந்தி மிகவும் கடுமையாக இருக்கிறது போலும்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

வீரய்யா ஸ்நானம் செய்வதற்காகக் கொல்லைப் புறம் சென்றார். மத்தியானம் சாப்பிடுவதற்கு முன் கொல்லைக் கிணற்றில் ஸ்நானம் செய்வது வீரய்யாவின் வழக்கம்.

வீரய்யா மாட்டுப்பள்ளி கிராமத்தில் ஒரு சிறிய மிராசுதார். முதல்தரமான பன்னிரண்டு ஏக்கர் நன்செய் நிலம்தான் அவரது சொத்து. அவர் பாட்டனார் பெரிய மிராசுதாராக இருந்தார். ஆனால் வீரய்யாவின் தகப்பனார் உள்ளூர் கோவிலுக்கு அருகில் ஏற்பட்ட சண்டையை யொட்டி நடந்த வழக்கில் பெரும்பாலான நிலங்களையும் இழந்தார்.

இன்று கூட, அந்தக் கிராமத்து அரசமரத்தடியில் கூடி வம்பு பேசும் கிராம வாசிகள், வீரய்யாவின் தகப்பனாருடைய பிடிவாத குணத்தைப் பற்றியும் அதனால் பல வருஷங்கள் தொடர்ந்து நடந்த வழக்கைப் பற்றியும் அடிக்கடி கூறுவது உண்டு. இரு கட்சியினரும் பெரும் பகுதிச் சொத்துக்களை இழந்த பின்தான் வழக்கு நின்றதாம்! அந்தக் கிராமச் சரித்திரத்திலேயே மேற்படி வழக்கு ஒரு முக்கிய ஸ்தானத்தைப் பெற்றிருந்தது!

வீரய்யாவின் தந்தை இறந்த போது மீதியிருந்த எட்டு ஏக்கர் நிலம்தான் வீரய்யாவுக்குக் கிடைத்தது. அத்துடன் தந்தை கொடுக்க வேண்டியிருந்த கடனையும் வீரய்யா ஒப்புக் கொள்ள நேர்ந்தது. இருந்தாலும் அவர் மிகவும் செட்டாகத் தன் குடும்பத்தை நடத்தியதால், சில வருஷங்களில் தந்தை கொடுக்க வேண்டியிருந்த கடன் அடைந்ததுடன், வீரய்யாவின் சலியா உழைப்பினால் எட்டு ஏக்கர் நிலம் பன்னிரண்டு ஏக்கராகப் பெருகியது. வீரய்யா செட்டும் கட்டுமாகக் குடித்தனம் செய்ததைக் கண்டு எல்லாரும் புகழ்ந்தனர். அவரைக் கருமி என்று யாரும் இகழவில்லை.

வீரய்யா செட்டாக இருந்தார் என்றாலும், தன் மகன் படிப்பதற்குத் தாராளமாகச் செலவு செய்யச் சிறிதும் தயங்கவில்லை. பண ஆசை கொண்டு தன் மகனுக்கு வரதட்சிணை வாங்கவும் விரும்பவில்லை. தன்னுடைய ஏழைச் சகோதரியின் மகளை ராமய்யாவுக்கு விவாகம் செய்து வைத்தார்.

அவருக்கு ஒரே ஒரு ஆசைதான் இருந்தது. அதாவது தான் இறக்கும்போது தன் மகன் ராமய்யாவின் வாழ்க்கைக்குப் போதுமான ஆஸ்தியை வைத்து விட்டுப் போக வேண்டும் என்பதுதான்.

வீரய்யா பெரிய படிப்புப் படித்தவர் அல்ல என்றாலும், கூர்மையான அறிவு உள்ளவர். அவர் அதிகமாகப் பேசமாட்டார். பிறர் காரியங்களில் தலையிட மாட்டார். யாருடனும் எல்லை மீறி அதிக சிநேகம் வைத்துக்கொள்ள மாட்டார். யாரையும் விரோதித்துக் கொள்ளவும் மாட்டார்.

வீரய்யா கோர்ட்டுக்கே போனதில்லையெனில், அவரது நல்ல சுபாவத்தை அறிந்து கொள்ளலாம். எனவே, கிராம ஜனங்கள் யாவரும் அவரிடம் மிக்க மதிப்பு வைத்திருந்தனர்.

அவரது நாணயத்தையும் உயர்ந்த குணத்தையும் அறிந்து விஜயவாடாவில் உள்ள சில செல்வந்தர்கள் அவரைத் தங்களுடைய தொழில் துறைகளில் பங்குதாரராகச் சேர்த்துக் கொள்ள விரும்பினார்கள். ஆனால் வீரய்யா அதற்குச் சம்மதிக்கவில்லை.

வீரய்யாவுக்கு மனைவி இறந்து போய்ப் பத்து வருஷங்களுக்கு மேல் ஆகின்றன. அவருக்கு அப்போது அதிக வயது ஆகாததால், மறுமணம் செய்து கொள்ளும்படி பலர் வற்புறுத்தினார்கள். வீரய்யா மறுமணம் செய்து கொள்ள அறவே மறுத்து விட்டார். அப்போது ராமய்யா விஜயவாடாவில் உள்ள தன் மாமன் வீட்டிலிருந்து கொண்டு படித்துக் கொண்டிருந்தான். வீரய்யாவுக்கு உதவியாக, விதவையான அவரது சகோதரி சுப்பம்மா சமைத்துப் போட்டுக்கொண்டிருந்தாள்.

ராமய்யா பி. ஏ. பாஸ் செய்தான் என்றாலும் உத்தியோகத்துக்குச் செல்லவில்லை. தன் ஒரே பிள்ளை தன்னை விட்டுப் பிரிந்து உத்தியோகத்துக்குச் செல்லுவதை வீரய்யா விரும்பவில்லை. எனவே வீட்டிலேயே புத்தகங்களை வாசித்துக் கொண்டு, யாதொரு கவலையுமின்றிக் காலத்தைக் கழித்து வந்தான்.

ராமய்யாவின் மனைவி கர்ப்பம் தரித்ததைக் கேட்டபோது வீரய்யாவுக்கும் அவருடைய சகோதரிக்கும் உண்டான ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. ராமய்யாவின் மனைவி பிரசவத்துக்காகப் பிறந்த வீட்டுக்குச் சென்றிருந்தாள்.

அன்று மத்தியானம் வெய்யில் மிகவும் கடுமையாக இருந்தது. வழக்கமாக ஜனங்கள் உட்கார்ந்திருக்கும் அந்த அரசமரத்தடியில் கூட அன்று யாரும் இல்லை. அனல் காற்று அடித்துக் கொண்டிருந்ததால், எல்லாரும் வீட்டுக்குள் இருந்தார்கள்.

வீரய்யா மாட்டுக் கொட்டிலில் தமது மாடுகளைக் கவனித்துக் கொண்டிருந்தார். ராமய்யா மன அமைதியின்றி வீட்டில் அங்குமிங்கும் உலாவிக் கொண்டிருந்தான். வாசிப்பதற்கு மனம் இடம் கொடுக்கவில்லை.

அவன் மனைவி பிறந்த வீடு சென்று இன்னும் ஒரு வாரம் கூட ஆகவில்லை. அதற்குள் ராமய்யா மன அமைதி இழந்து தவித்தான். ஒருவாரம் கூட மனைவியைப் பிரிந்திருக்க முடியாததைக் குறித்து அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

தங்கள் கிராமத்தின் மீது கம்யூனிஸ்டுகள் படையெடுக்கப் போவதாக அவன் தந்தை கூறிய விஷயம் வேறு அவன் மனத்தைக் கலக்கிக் கொண்டிருந்தது. கிராமத்தில் உள்ள இரண்டொரு செல்வந்தர்கள் கம்யூனிஸ்டுகளுக்குப் பயந்து விஜயவாடாவில் வசித்து வந்தார்கள்.

எனவே கம்யூனிஸ்டுகள் அந்தக் கிராமத்துக்கு ஏன் வரப்போகிறார்கள்! ஒருவேளை அங்கும் படையெடுத்தால்...நல்லவேளையாக அவன் மனைவி அங்கு இல்லை. ஆனால் தந்தை இருக்கிறாரே...... இதை நினைத்தபோது அவன் மனம் பதறியது. கம்யூனிஸ்டுகளைத் தன் தந்தை வெறுப்பது அவனுக்குத் தெரியும்.

ராமய்யா யாருடனும் தாராளமாகப் பழகும் சுபாவம் உடையவன் அல்ல. நாலு பேருக்கு மத்தியில் அவன் கலகலப்பாகப் பேசமாட்டான். சிறுவனாக இருந்தபோது கூட அவன் யாருடனும் சேர்ந்து விளையாட மாட்டான். எனவே மற்றப் பையன்களுக்கு இவனைக் கண்டால் பிடிப்பதில்லை. ராமய்யா ஒரே பிள்ளை; சிறுவயதில் தாயை இழந்தவன்; செல்வமாக வளர்க்கப்பட்டவன். ஒருவேளை இவையே அவனுடைய மேற்படி சுபாவத்துக்குக் காரணமாக இருக்கலாம்.

அவன் கலாசாலைக்குச் சென்ற பிறகு கூட மற்ற மாணவர்களுடன் தாராளமாகப் பழகுவதில்லை. அப்போது மாணவர்களின் இயக்கம் வெகு தீவிரமாக இருந்து வந்தது. ஆனால் ராமய்யா சாப்பிடுவதற்காக ஹோட்டலுக்குச் செல்லுவதைத் தவிர, மற்றப்படி தன்னுடைய அறையை விட்டு எங்கும் வெளியே செல்லுவதில்லை.

இரண்டாவது யுத்தத்தின் கடைசி நாட்களில், அன்னியர் ஆட்சியை எதிர்த்துத் தேசம் முழுதும் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது அல்லவா! அப்போது கலாசாலைகளில் அடிக்கடி மாணவர்களின் வேலை நிறுத்தம் நடந்த வண்ணமாக இருந்தது அல்லவா! அப்போது மாணவர்கள் இரு கோஷ்டிகளாகப் பிரிந்து நின்றனர்.

ஒரு கோஷ்டியார் இந்திய தேசிய மகாசபையுடன் தொடர்புள்ள மாணவர் காங்கிரஸில் சேர்ந்திருந்தனர்; மற்றொரு கோஷ்டியினர் கம்யூனிஸ்டு கட்சியுடன் தொடர்புள்ள மாணவர் சம்மேளனத்தில் சேர்ந்திருந்தனர். ஆனால் ராமய்யா எந்தக் கோஷ்டியிலும் சேராமல் தனியாக இருந்தான்.

அவன் கிராமத்திலிருந்து வேறு இரண்டு மூன்று மாணவர்கள் கலாசாலையில் வாசித்துக் கொண்டிருந்தனர். அவர்களில் வெங்கடேசுவரலு என்பவன் கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்தவன். அவன் ராமய்யாவுடன் நட்புக் கொள்ள எவ்வளவோ முயற்சி செய்தான். அவன் அவ்விதம் நட்புக் கொள்ள முயற்சித்தது ராமய்யாவுக்கு விசித்திரமாகத் தோன்றியது. இருந்தாலும் அவன் தன் சொந்த கிராமத்திலிருந்து வந்தவனாதலால், அவனை விரோதித்துக் கொள்ள ராமய்யா விரும்பவில்லை.

பிறகு வெங்கடேசுவரலு ராமய்யாவிடம் சில புத்தகங்களைக் கொடுத்து வாசிக்கும்படி சொன்னான். அவை கம்யூனிஸ்டு பிரசாரப் புத்தகங்கள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

சில நாட்கள் கழித்து வெங்கடேசுவரலு ராமய்யாவைக் கண்டு, ''நான் கொடுத்த புத்தகங்களை வாசித்து விட்டாயா?'' என்று கேட்டான்.

''இன்னும் வாசிக்கவில்லை'' என்று சுருக்கமாகப் பதில் அளித்தான் ராமய்யா.

உண்மையில் ராமய்யா அந்தப் புத்தகங்களை ஒரு சில தினங்களில் வாசித்து முடித்துவிட்டான்.



யைச் சேர்ந்தவன்'' என்று வெங்கடேசவரலுவின் முகத்தில் அறைந்தாற்போல் பதிலளித்தான் ராமய்யா.

பிறகு நிலைமை முற்றி இருவருக்கும் கைகலப்பு ஏற்பட்டு விட்டது. நல்லவேளையாக மற்றவர்கள் மிகவும் கஷ்டப்பட்டு அவ்விருவரையும் விலக்கி விட்டனர்.

மேற்படி சண்டையைப் பற்றிக் கேள்விப்பட்ட வீரய்யா, ''நீ மற்றவர்களுடன் ஏன் விவாதத்துக்குப் போகிறாய்!'' என்றுமாத்திரம் தன் மகனைக் கேட்டார். வேறு ஒன்றும் சொல்லவில்லை. எனினும் அவரது குரலில் தொனித்த வேதனையைக் கண்டு ராமய்யா மனம் புழுங்கினான். சச்சரவை முற்ற விட்டது தவறு என்று நினைத்தான். அதிலிருந்து அவன் புத்தகசாலைக்குச் செல்லுவதைக் கூட அறவே நிறுத்தி விட்டான். சாப்பிட்ட நேரம் போக மீதி நேரத்தில் எல்லாம் வீட்டிலேயே புத்தகம் வாசித்த வண்ணமாக இருந்தான்.

''ஏன் அப்பா, எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது புத்தகத்தை வாசித்துக் கொண்டிருக்கிறாயே! வாசிப்பதற்கு நேரம், காலம் ஒன்றும் இல்லையா! அப்படியாவது நல்ல புத்தகங்களை வாசிக்கிறாயா! ராமாயணம், மகாபாரதம் அல்லது வேறு ஏதாவது நல்ல புத்தகங்களை வாசிக்கக்கூடாதா! இந்த இங்கிலீஷ் புத்தகங்களை வாசிப்பதால், இந்த உலகத்திலும் பலனில்லை, மறு உலகத்திலும் பலனில்லை'' என்று ராமய்யாவின் அத்தை சுப்பம்மா அடிக்கடி அவனிடம் சொல்லத் தொடங்கினாள்.

ஒரு நாள் சுப்பம்மா மிகப் பரபரப்புடன் வீட்டுக்குள் வந்தாள். ''ராமய்யா நீ கேட்டாயா சமாசாரத்தை! கம்யூனிஸ்டுகள் இந்தக் கிராமத்தில் வந்து கொள்ளையடிக்கப் போகிறார்களாமே! எல்லாரும் திகிலடைந்திருக்கிறார்கள்!' என்று ராமய்யாவிடம் சொன்னாள்.

''வந்தால் என்ன!'' என்றான் ராமய்யா வேடிக்கையாக.

''கையில் புத்தகம் இருந்து விட்டால் போதும். வேறு எதைப்பற்றியும் உனக்குக் கவலையில்லை'' என்று அலுப்புடன் சொல்லிக் கொண்டே சுப்பம்மா சமையல் அறைக்குள் சென்றுவிட்டாள்.

அவை கம்யூனிஸ்டு பிரசாரப் புத்தகங்கள் என்பதை அவன் தெரிந்து கொண்டதுடன், வெங்கடேசவரலு என்ன நோக்கத்துடன் அந்தப் புத்தகத்தைத் தனக்கு வாசிக்கக் கொடுத்தான் என்பதையும் அறிந்து கொண்டான். தன்னைக் கம்யூனிஸ்டுக் கட்சியில் சேர்த்துக் கொள்ள வெங்கடேசவரலு செய்து வரும் சூழ்ச்சியையும் தந்திரத்தையும் கண்டு ராமய்யாவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

ஒரு நாள் ராமய்யா தன் கிராமத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ள புத்தகசாலையில் உட்கார்ந்து ஏதோ வாசித்துக் கொண்டிருந்தான். அப்போது மற்றும் சில மாணவர்கள் அங்கு வந்தனர். வெங்கடேசவரலுவும் அங்கு வந்து சேர்ந்தான்.

மாணவர்களுக்குள் அரசியல் விஷயமாக வாக்குவாதம் ஏற்பட்டது. ராமய்யாவினால் அதிக நேரம் மௌனமாக இருக்க முடியவில்லை. அவனும் விவாதத்தில் கலந்துகொள்ளும்படி நேர்ந்தது.

''ராமய்யா எந்தக் கட்சியைச் சேர்ந்தவன்!'' என்றான் ஒரு மாணவன்.

''அவன் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவனும் அல்ல, கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்தவனும் அல்ல. ராய் கட்சியைச் சேர்ந்தவன்'' என்றான் மற்றொருவன்.

பல நாட்களாக வெங்கடேசவரலு எதிர் பார்த்துக் கொண்டிருந்த சந்தர்ப்பம் இப்போது கிடைத்தது. ராமய்யாவைச் சண்டைக்கு இழுக்க வேண்டும் என்பதே அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த சந்தர்ப்பமாகும்.

''ராய் கட்சியினர் பிரிட்டிஷாரின் ஏஜண்டுகள் அல்லவா!'' என்றான் வெங்கடேசவரலு குத்தலாக.

வீண் சச்சரவில் ஈடுபடுவது ராமய்யாவின் சுபாவம் அல்லவாயினும், வெங்கடேசவரலு கூறியதைக் கேட்டதும் அவனுக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று.

ராமய்யாவுக்குச் சாதாரணமாகக் கோபம் வருவதில்லை. கோபம் வந்துவிட்டால் அவன் தன்னையே மறந்து விடுவான்.

''ஆமாம்! ராய் கட்சியினர் பிரிட்டிஷாரின் ஏஜண்டுகள்தான். கோடிக்கணக்கானவர்களைக் கொலை செய்த ஸ்டாலினின் ஏஜண்டுகளாக இருப்பதைக் காட்டிலும் பிரிட்டிஷாரின் ஏஜண்டுகளாக இருப்பது மேலானதல்லவா!......கம்யூனிஸ்டுகளை இரண்டு கோஷ்டிகளாகப் பிரிக்கலாம். ஒரு கோஷ்டியினர் மடையர்கள்; மற்றொரு கோஷ்டியினர் கொலையிலும் கொள்ளையிலும் ஈடுபடும் குண்டர்கள். நீ இரண்டாவது கோஷ்டி

* * *

**மா**லை நாலு மணி இருக்கும். அப்போது கூட வெய்யில் கடுமையாக இருந்தது.

கொட்டிலில் மாடுகள் தொட்டியிலிருந்த தண்ணீரைக் குடித்துக் கொண்டிருந்தன.

ராமய்யா, தன் தந்தையும் தன் வீட்டு வேலையாளும் ஏதோ இரகசியமாகப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். ராமய்யாவைக் கண்டதும் அவர்கள் தங்களுடைய பேச்சை நிறுத்திக் கொண்டு விட்டார்கள்.

''நம்முடைய சின்ன எஜமான் தங்கக் கம்பி! யாருடைய பேச்சுக்கும் போவதில்லை. எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை'' என்றான் வேலையாள் பேச்சை மாற்றுவதற்காக.

ராமய்யா எதுவும் பதில் சொல்லவில்லை. உள்ளே வந்து விட்டான்.

அரை மணி நேரம் கழித்து வீரய்யா தன் மகன் ராமய்யாவைக் கூப்பிட்டார். ''நீ தூளிபடு கிராமத்துக்குச் செல்ல வேண்டும். எனக்கு அவசர

மாகப் பணம் தேவையாக இருக்கிறது. அங்கே ரங்கய்யா மாமாவிடமிருந்து முன்னூறு ரூபாய் வாங்கி வரவேண்டும்'' என்றார்.

''முன்னூறு ரூபாய்தானே, அப்பா! இதற்காக நான் ஏன் தூளிபடுவுக்குச் செல்ல வேண்டும்! இந்த ஊரிலேயே யாரிடமிருந்தாவது வாங்கிக் கொள்ளலாமே!'' என்றான் ராமய்யா.

'' இங்கு நான் பலரையும் கேட்டாகி விட்டது. கிடைக்க வில்லை. நீ இப்போதே புறப்பட்டுச் செல்ல வேண்டும். ஒரு வேளை ரங்கய்யாவிடம் பணம் கையில் இராமலிருக்கலாம். நீ இன்றிரவு அங்கேயே தங்கி நாளைக் காலையில் பணத்தை வாங்கி வர வேண்டும்'' என்றார் வீரய்யா.

மாட்டுப்பள்ளியிலிருந்து தூளிபடு கிராமம் ஐந்து மைல் தூரத்தில் இருக்கிறது. வீரய்யாவுக்கும் ரங்கய்யாவுக்கும் நீண்ட காலமாகக் கொடுக்கல் வாங்கல் உண்டு. எனவே, ராமய்யா தன் தந்தை சொன்னபடியே ரங்கய்யாவிடமிருந்து பணம் வாங்கி வருவதற்காகத் தூளிபடு கிராமத்துக்குப் புறப்பட்டான்.

''எந்தக் காரணம் கொண்டும் இன்றிரவு நீ புறப்பட்டு வரவேண்டாம். அவ்வளவு அவசரம் எதுவுமில்லை. காலம் கெட்டுக் கிடக்கிறது. நாளைக் காலையில்தான் நீ புறப்பட்டு வரவேண்டும்'' என்று வீரய்யா தன் மகனிடம் மறுபடியும் வற்புறுத்திக் கூறினார்.

ராமய்யா தூளிபடுவுக்குச் சென்றபோது சாயங்காலம் ஆகிவிட்டது. காலையில் பணம் தருவதாகவும் இரவு அங்கேயே தங்கும்படியும் ரங்கய்யா சொன்னார். தன் தந்தையும் அவ்விதமே சொல்லியிருந்ததால் அவன் இரவு அங்கேயே தங்கிவிட்டான்.

விடியற்காலம் மூன்றரை மணி இருக்கும். ''ராமய்யா! ராமய்யா! எழுந்திரு! எழுந்திரு!'' என்று யாரோ கூக்குரலிட்டதைக் கேட்டு, ராமய்யா திடுக்கிட்டு எழுந்தான்.

ரங்கய்யாதான் அவனைத் தூக்கத்திலிருந்து எழுப்பினார். ''உங்கள் கிராமத்தில் நேற்றிரவு கம்யூனிஸ்டுகள் பிரவேசித்து அக்கிரமம் செய்து விட்டார்களாம்'' என்றார்.

அதைக் கேட்டதும் ராமய்யாவின் தூக்கம் தெளிந்தது. ''உங்களுக்கு யார் சொன்னார்கள்!'' என்று கேட்டான்.

உன் கிராமத்திலிருந்து வந்த கறிகாய்க் கூடைக்காரர்கள் சொன்னார்கள்.

ராமய்யாவுக்கு அதற்குமேல் எதுவும் கேட்க முடியவில்லை. அவன் பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருந்தான்.

பணத்தை எடுத்துக் கொண்டு ஊருக்குத் திரும்பும்படி ரங்கய்யா அவனிடம் சொன்னார்.

'' இப்போது பணம் வேண்டாம்'' என்று சொல்லிவிட்டு ராமய்யா தன் கிராமத்துக்குப் புறப்பட்டான்.

வழியெங்கும் இருளாக இருந்தது. நிசப்தமாகவும் இருந்தது. இலைகள் அசையவில்லை. பட்சிகள் கத்தவில்லை. இதையெல்லாம் கண்ட ராமய்யாவுக்குத் தன் கிராமத்துக்கு ஏற்பட்டுள்ள கதியை மேற்படி நிலைமை குறிப்பிக்கிறதோ என்று தோன்றியது.

அவன் தன்னால் முடிந்த வரையில் வேகமாக நடந்தான். சிற்சில சமயங்களில் ஓடினான். கால் இடறிப் பல தடவை கீழே விழுந்தான். ஓர் இடத்தில் கால் தடுக்கியதில் அவனுடைய கட்டை விரலிலிருந்து இரத்தம் பெருகிக் கொண்டிருந்தது. அதெல்லாம் அவனுக்குத் தெரியவில்லை. அவனது அவயவங்கள் எல்லாம் உணர்ச்சியற்று விட்டதுபோல் தோன்றியது.

அவன் செல்லும் வழியில் குறுக்காக ஒரு பெரிய சர்ப்பம் ஓடியதைக் கூட . அவன் சிறிதும் லட்சியம் செய்யாமல் வேகமாக நடந்து சென்றான்.

ராமய்யா தன்னைத்தானே நொந்து கொண்டான்; சபித்துக் கொண்டான். பலமான வதந்தியை லட்சியம் செய்யாமல் தன் தந்தையையும் அத்தையையும் உதவியின்றித் தனியாக வீட்டில் விட்டு விட்டு வந்தது பெரும் தவறு என்று மனம் வெதும்பினான்.

ராமய்யா தன் கிராமத்தை அடைந்தபோது ஐந்தரை மணி இருக்கும். அப்போதுதான் இருள் பிரிந்து கொண்டிருந்தது. கிராமம் முழுதும் பயங்கரமான அமைதி குடிகொண்டிருந்தது.

ராமய்யா மனம் பதற, உடல் நடுங்கத் தன் வீடு போய்ச் சேர்ந்தான். அவன் வீட்டுக் கதவுகள் திறந்து கிடந்தன. அதைக் கண்டதும் அவனுக்குப் 'பகீ'ரென்றது.

உள்ளே ஓடினான். காலில் ஏதோ தடுக்கிக் கீழே விழுந்தான். அவனுடைய தந்தையின் உடல் கீழே உதிர வெள்ளத்தில் கிடந்தது. அதைப் பார்த்ததும் அவனுக்கு 'ஹோ' வென்று கதற வேண்டும் போலிருந்தது. ஆனால் கதற முடியாமல் தொண்டை அடைத்துக் கொண்டது.

வீடு முழுதும் சாமான்கள் எல்லாம் புயலில் அடிபட்டவைபோல் சிதறுண்டு கிடந்தன.

அவனுடைய தந்தையின் உடலுக்கு அருகில் அவன் அத்தை மூர்ச்சையாகிக் கிடந்தாள்.

கொலையுண்டு கிடந்த தன் தந்தையின் கையை எடுத்துக் கண்ணில் ஒத்திக்கொண்டான். அத்தை இறக்கவில்லை என்பதும், மூர்ச்சையுற்றிருக்கிறாள் என்பதும் அவனுக்குத் தெரிந்தது.

அவனுடைய தந்தையின் முகம் அமைதியாக இருந்தது; கண்கள் மூடியிருந்தன.



ராமய்யாவின் கண்களிலிருந்து அருவி போல் கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது.

தன் தந்தை உயிருடனிருந்தபோது தான் அவருக்கு எவ்விதத் தொண்டும் செய்யவில்லையே என்பதை நினைத்தபோது ராமய்யாவுக்கு இருதயமே வெடித்து விடும்போல் இருந்தது.

ஆகா! அவனுக்காக அவன் தந்தை எவ்வளவு தியாகம் செய்திருக்கிறார்! அவர் இரண்டாவது விவாகம் செய்து கொள்ளாதது ராமய்யாவை உத்தேசித்துத்தானே! தன் தந்தை புஷ்பங்களால் பூஜிக்கத் தக்கவர் என்று அவன் உருகினான்.

"அவருக்கு நான் செய்யவேண்டிய கடமையை எப்படிச் செய்வேன்! அவருக்கு எனது நன்றியை எப்படிச் செலுத்துவேன்!" என்று புலம்பினான்.

பளிரென்று அவன் மனதில் ஒரு விஷயம் உதயமாயிற்று. "இன்றிரவு திரும்பி வராதே! காலம் கெட்டுக் கிடக்கிறது!" என்று தன் அருமைத் தந்தை சொன்ன வார்த்தைகள் அவன் ஞாபகத்துக்கு வந்தன. அவன் தந்தை அவனிடம் கூறிய கடைசி வார்த்தைகள் அவைதான்.

அந்த வார்த்தைகளின் அர்த்தம் என்ன என்பது அப்போதுதான் அவனுக்குப் புரிந்தது. அவருக்கு அப்போது பணம் எதுவும் தேவையில்லை. தன்னைக் கம்யூனிஸ்டுகளிடமிருந்து காப்பாற்றுவதற்காகவே அவர் அவ்விதம் யுக்தி செய்தார் என்பதையும் அவன் அறிந்து கொண்டான்.

"கம்யூனிஸ்டுகள் இந்தக் கிராமத்தைச் சூறையாடப் போகிறார்களாம்" என்று தன் தந்தை ஒரு சமயம் சொன்னபோது, அவர் முகத்தில் படர்ந்திருந்த கவலையையும் கலக்கத்தையும் அவன் எண்ணிப் பார்த்தான். அவர் தம் சொந்த உயிருக்காக அவ்விதம் கவலைப்படவில்லை. மகனுக்கு ஏதாவது ஆபத்து நேருமோ என்பதே அவரது கவலை என்பதும் அவனுக்கு அப்போதுதான் புலப்பட்டது.

தமது மகனைக் காப்பாற்றுவதற்காக வீரய்யா தம்முடைய உயிரை அர்ப்பணம் செய்தார்.

ராமய்யா குழந்தையைப்போல் விம்மி விம்மி அழுதான். உலகமே அஸ்தமித்து விட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது. அவனுடைய இருதயத்தில் ஓர் ஈட்டி பாய்வது போன்ற சகிக்க முடியாத வேதனை ஏற்பட்டது.

"என் அருமைத் தந்தையே! கம்யூனிஸ்டுகள் படையெடுக்கப் போகிறார்கள் என்பது தங்களுக்குத் தெரிந்தும் தாங்கள் ஏன் இப்படிச் செய்தீர்கள்! நீங்கள் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால், நாம் எல்லோரும் இந்தக் கிராமத்தை விட்டுச் சென்றிருக்கலாமே" என்று மீண்டும் பிரலாபித்தான்.

இதுவரையில் தான் அரசியலில் கலந்து கொள்ளாமல் தனித்து இருந்தது எவ்வளவு பெரிய தவறு என்பதை உணர்ந்து கொண்டான். "இத்தகைய அக்கிரமம் இனி எந்த இடத்திலும் நடைபெறாம லிருப்பதற்குச் செய்யும் முயற்சியில் நானும் தீவிர பங்கு எடுத்துக் கொள்வேன்" என்று தன் தந்தையின் உடலுக்கு முன்னிலையில் பிரதிக்ஞை செய்து கொண்டான்.

இவ்வாறு பிரதிக்ஞை செய்ததும் ராமய்யாவின் மனதில் ஒரு புதிய சக்தி பிறப்பது போல் தோன்றியது.

தன் தந்தையின் மூர்ச்சையைத் தெளிய வைப்பதற்காக ஒரு பாத்திரத்தில் குளிர்ந்த தண்ணீரைக் கொண்டு வந்தான். அதை அவனுடைய முகத்தில் அன்புடன் தெளித்தான்.


மலச்சிக்கலை
ஒரே இரவில்
அகற்றுகிறது






ப்ரூக்லாக்ஸ்

ருசி மிகுந்த சாக்கலெட் மலமிளக்கி

ஏஜெண்டுகள்:
ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜென்ஸி
99-A. அரண்மனைக்காரத் தெரு, மதராஸ் - 1

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## துருக்கி—4

சுல்தானின் உத்தரவுக்கு இணங்க' துருக்கி பார்லிமெண்டுக்கு நடந்த தேர்தலில் கெமால் பாஷாவின் கட்சியான தேசியக் கட்சிக்கே பெரும்பான்மையான ஸ்தானங்கள் கிடைத்தன.

மேற்படி முடிவைக் கண்டு கெமால் பாஷா கட்சியினர் குதூகலம் அடைந்தார்கள்; எனினும் கெமால் பாஷாவுக்கு மாத்திரம் சிறிதும் உற்சாகம் ஏற்படவில்லை.

பிரிட்டிஷாரின் பொம்மையாக இருந்த துருக்கி சுல்தானிடத்தில் கெமாலுக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. தங்களுடைய போராட்டம் இன்னும் முடியவில்லை என்று அவர் தமது சகாக்களிடம் கூறினார். புதிய பார்லிமெண்டுக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காகக் கான்ஸ்டாண்டிநோபிளுக்குச் செல்ல வேண்டாம் என்றும் கெமால் பாஷா அவர்களை எச்சரித்தார்.

ஆனால் கெமால் பாஷாவின் சகாக்கள் அவருடைய எச்சரிக்கையைப் பொருட்படுத்தவில்லை. சுல்தானின் சம்மதத்தின் மீதே பார்லிமெண்டுக்குத் தேர்தல் நடந்ததாகையால், பார்லிமெண்டு அங்கத்தினர்களான தங்களைச் சுல்தான் மதித்து கௌரவிப்பார் என்று அவர்கள் எண்ணினர்.

போதாக் குறைக்கு, சுல்தானின் தலைமையில் புதிய பார்லிமெண்டு கூடினால் அதைத் தாங்கள் அங்கீகரிப்பதாகப் பிரிட்டன் முதலிய நேச தேசங்களும் பிரகடனம் செய்தன.

எனவே, ரௌப் பெக் என்பவரின் தலைமையில் தேசியக் கட்சி அங்கத்தினர்கள் ஆடம்பரமாகக் கான்ஸ்டாண்டிநோபிளுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். புதிய பார்லிமெண்டில் கெமால் பாஷா ஓர் அங்கத்தினராயினும், அவர் மாத்திரம் தலைநகருக்குச் செல்லவில்லை; தீர்க்க தரிசனத்துடன் அனடோலியாவிலேயே தங்கி விட்டார்.

* * *

புதிய பார்லிமெண்டு 1920-ம் வருஷம் ஜனவரி மாதத்தில் கூடியது. ஏற்கெனவே தேசியக் கட்சியினர் தயாரித்திருந்த நிபந்தனைகள் அடங்கிய 'தேசியப் பிரகடனம்' முதல் கூட்டத்திலேயே நிறைவேறியது.

இதையும் புதிய பார்லிமெண்டு செய்த மற்றும் சில காரியங்களையும் பிரிட்டிஷார் விரும்பவில்லை. எனவே அவர்கள் ஏற்கெனவே எகிப்து முதலிய நாடுகளில் கையாண்ட நடவடிக்கைகளைத் துருக்கி விஷயத்திலும் கைக்கொள்ள முற்பட்டார்கள்.

திடீரென்று ஒரு பிரிட்டிஷ் தளபதி தமது துருப்புகளுடன் தலைநகருக்குள் பிரவேசித்து, அதைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டார். நகரெங்கும் ராணுவச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. ரௌப் பெக் உள்பட நாற்பது தேசியக் கட்சியைச் சேர்ந்த பார்லிமெண்டு அங்கத்தினர்கள் கைதியாயினர். உடனே அவர்கள் இத்தாலிக்கு அப்பால் உள்ள மால்டா தீவுக்குப் பிரிட்டிஷாரால் நாடு கடத்தப் பட்டார்கள்.

புதிய பார்லிமெண்டு கூடி ஆறு வார காலம் முடிவதற்குள் துருக்கி தலை நகரில் இத்தனை கோலாகலங்கள் நிகழ்ந்துவிட்டன!

எனவே, மறுபடியும் துருக்கி மக்களிடையே மிகுந்த பரபரப்பு ஏற்பட்டது. துருக்கியர்களின் தேசிய அபிலாஷைகளுக்குச் சுல்தானும் பிரிட்டிஷாரும் விரோதிகள் என்பது நிதர்சனமாகியது.

பிரிட்டிஷாரிடம் கைதியாகாமல் தப்பிய பார்லிமெண்டு அங்கத்தினர்களில் பலர் அங்காராவுக்குச் சென்றார்கள். அங்கு அவர்கள் பார்லிமெண்டுக் கூட்டத்தை நடத்தலாயினர். அதற்குத் துருக்கி தேசிய மகா சபை (Grand National Assembly of Turkey) என்று பெயரிடப்பட்டது. அந்தச் சபைதான் துருக்கி நாட்டின் சர்க்கார் என்றும் பிரகடனம் செய்தனர். தலைநகரான கான்ஸ்டாண்டிநோபிள் பிரிட்டிஷாரின் வசமாகி விட்டதால் அங்குள்ள சுல்தானுக்கும் அவரது சர்க்காருக்கும் இனி எவ்வித அதிகாரமும் இல்லை என்றும் தேசிய மகா சபை உலகம் அறிய அறிவித்தது.

இதைக் கேட்டதும் சுல்தானுக்கு ஆத்திரம் பொங்கியது. கெமால் பாஷாவும் அவரது சகாக்களும் தேசப் பிரஷ்டர்கள் என்றும் அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப் பட்டிருக்கிறது என்றும் சுல்தான் பதில் பிரகடனம் விடுத்தார்.

அத்துடன் சுல்தானின் கோப வெறி அடங்கவில்லை. அவர் கெமால் பாஷாவுக்கு எதிராக மத வெறியைத் தூண்ட முற்பட்டுவிட்டார்.



முஸ்தபா கெமால் பாஷா

கெமால் பாஷாவும் அவரது சகாக்களும் மத துரோகிகள் என்று பிரசாரம் செய்யத் தொடங்கினார். அவர்களைக் கொல்லுவோருக்கு இந்த உலகிலும் மறு உலகிலும் நன்மை உண்டாகும் என்று துருக்கி மக்களுக்கு உபதேசம் செய்தார்!

துருக்கி சுல்தானே அப்போது கலிபாவாகவும் அதாவது மதத் தலைவராகவும் இருந்தார். மதத் தலைவர் என்ற முறையில் அவர் கெமால் பாஷா கோஷ்டியினர்மீது 'ஜிஹாத்' (மதப் போர்) தொடுக்கும்படி துருக்கி மக்களுக்குக் கட்டளையிட்டார்.

கெமால் பாஷா தேசத் துரோகி என்று சுல்தான் கூறத் துணியவில்லை. அவ்விதம் கூறினால் தமது கூற்றைத் துருக்கி மக்கள் நம்ப மாட்டார்கள் என்பது அவருக்குத் தெரியும். எனவே கெமால் பாஷாவையும் அவரது சகாக்களையும் மத துரோகிகள் என்று பிரசாரம் செய்தால், துருக்கி ஜனங்களிடம் தம்முடைய சூழ்ச்சி நிச்சயமாகப் பலிக்கும் என்று சுல்தான் எண்ணினார்.

இவ்வாறாக, கெமால் பாஷா அரசியல் புரட்சிக்காரராக விளங்கியதுடன், மத துரோகி என்றும் பட்டம் சூட்டப்பட்டார்! அப்போது கெமால் பாஷாவின் உயிருக்கு எந்தச் சமயத்திலும் ஆபத்து ஏற்படலாம் என்று துருக்கி தேச பக்தர்கள் கலங்கினர்.

கலிபாவின் கூற்றுக்கு இணங்க, இந்த உலகத்திலும் மறு உலகத்திலும் 'நன்மை' அடைவதற்காக யாராவது ஒரு மத வெறியன் அவரைச் சுலபமாகக் கொன்று விடலாம் அல்லவா?

தேசியக் கட்சியை இருந்தவிடம் தெரியாமல் சிதைத்து விடுவதற்காகச் சுல்தான் தமது சக்தி முழுவதையும் உபயோகித்தார். கெமால் பாஷா கோஷ்டியினருக்கு எதிராக ஜனங்களிடையே ஆத்திரத்தையும் எழுச்சியையும் உண்டாக்குவதற்காக நாடெங்கும் பொய்ப் பிரசாரகர்களும், மத உபதேசகர்களும் அனுப்பப்பட்டனர்.

ஆரம்பத்தில் சுல்தானின் முயற்சி வெற்றி பெறக்கூடும் என்று தோன்றியது. துருக்கி நாடெங்கும் ஜனங்களிடையே எழுச்சி உண்டாயிற்று. உள் நாட்டுக் கலகங்கள் பீறிட்டெழுந்தன. கலகங்களில் ஈடுபட்ட இரு சாராரும் ஈவிரக்கமின்றித் தங்கள் தேச சகோதரர்களையே படுகொலை செய்தனர்.

துருக்கியின் அலங்கோல நிலையைக் கண்ட கிரேக்கர்கள் இனி தாங்கள்தான் துருக்கி நாட்டின் நிரந்தர எஜமானர்கள் என்று மனப்பால் குடித்தனர். அவர்கள் பல விடங்களிலிருந்தும் துருக்கியர்களை விரட்டியடிக்கத் தொடங்கினர்.

# படித்துப் பாருங்கள்!

## ஐந்தாண்டு அபிவிருத்தி

சென்ற ஐந்து ஆண்டுகளில் சென்னை சர்க்கார் என்ன சாதித்தார்கள்! பல மாதங்களாக அடிக்கடி கேட்கப்பட்டு வந்த இந்தக் கேள்வி, தேர்தல் ஆரம்பமாகியுள்ள இச்சமயத்தில் உச்சஸ்தாயியை அடைந்திருக்கிறது. மேற்படி கேள்விக்கு இப்போது சென்னை சர்க்காரே பதில் அளித்திருக்கிறார்கள். யாரும் மறுக்க முடியாதவாறு படங்களுடன், புள்ளி விவரங்களுடன் பதில் அளித்திருக்கிறார்கள். "இவையெல்லாம் நாங்கள் சாதித்தவைதான்" என்று அழகான புத்தகங்கள் ரூபமாகத் தங்கள் பதிலை வெளியிட்டிருக்கிறார்கள்.

சாதாரணமாகச் சர்க்கார் பிரசுரங்கள் சுவாரஸ்யமாக இருப்பதில்லை. எனினும் "ஐந்தாண்டு அபிவிருத்தி" என்ற மகுடத்துடன் சென்னை சர்க்கார் செய்தி இலாகா வெளியிட்டுள்ள புத்தகங்களை அந்த ஜாப்தாவில் சேர்க்க முடியாது.

இந்த மாகாணத்தில் உள்ள பதினொரு ஜில்லாவிலும் பல துறைகளில் சர்க்கார் செய்துள்ள அபிவிருத்திகள் பதினொரு புத்தகங்களாக வெளியிடப் பட்டிருக்கின்றன. சென்ற ஐந்து ஆண்டுகளில் இம் மாகாணத்தில் நீர்ப்பாசனத் துறையில் சுமார் பத்து மடங்கும், மின்சாரத் துறையில் இருபது மடங்கும் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால், மிகையாகத் தோன்றும். புள்ளி விவரங்களுடன் இப் புத்தகத்தில் படிக்கும்போது நம்பவேண்டியதாயிருக்கிறது.

ஒவ்வொரு ஜில்லாவைப் பற்றிய புத்தகத்தின் அட்டைப் படமும் அந்தந்த ஜில்லாவின் தனிச் சிறப்பைப் 'பளிச்'சென்று காட்டுகின்றது. ஒவ்வொரு புத்தகத்தையும் அந்தந்த ஜில்லாவைப் பற்றிய சிறந்த பூகோள சரித்திர பாடபுத்தகம் என்றும் சொல்லலாம். நூறு பக்கங்கள் கொண்ட இந்த உபயோகமான பிரசுரம் ஒவ்வொன்றின் விலையும் நாலே அணாதான்!

## Handbook for Congressmen

"காங்கிரஸ்காரர்கள் சாதாரண மனிதர்கள்தான், தெய்வப் பிறவிகள் அல்ல. இத் தேசத்தின் இயல்பான நற்குணங்களைப்போல் குற்றம் குறைகளும் இத் தேசப் பிரதிநிதிகளான அவர்களிடம் இருக்கின்றன. எனினும் நமது தேசத்தில் காங்கிரஸ்தான் மிக மிகப் பழமையான ஸ்தாபனம் என்பதை யாரும் மறுக்க முடியாது. அதிகப் பிரதிநிதித்துவமும் தேசத்தில் உள்ள திறமைசாலிகளையும் கொண்ட ஸ்தாபனமும் அதுதான். தேசத்துக்காக மகத்தான தியாகம் செய்து அன்னியர்களின் ஆட்சியை எதிர்த்து நின்று சுதந்திரம் பெற்ற ஸ்தாபனமும் காங்கிரசே."

காங்கிரசைப்பற்றி காந்தி மகான் கூறிய இந்த மணிமொழிகளை Hand book for Congressmen என்ற இந்தப் புத்தகம் இந்திய மகாஜனங்களுக்கு இப்போது மீண்டும் ஞாபக மூட்டியிருக்கிறது. பாரத நாட்டின் புராதனப் பெருமை, சுதந்திரப் போரில் காங்கிரஸ் பட்ட கஷ்டங்கள், காங்கிரசின் எதிர்காலத் திட்டங்கள் முதலியவை இந்தப் புத்தகத்தில் சாங்கோபாங்கமாக விவரிக்கப் பட்டிருக்கின்றன. இப் புத்தகத்துக்குப் பண்டித ஜவாஹர்லால் நேரு எழுதியுள்ள முகவுரை அவரது அழகிய கையெழுத்திலேயே அச்சிடப் பட்டிருக்கிறது. இதன் விலை ரூ. 1. வெளியிட்டோர்: The Central Publicity Board, Indian National Congress, New Delhi.





## ஒவ்வொரு வேலைக்கும் பிரத்யேகமான





# ஷாலிமார் பெயிண்ட்





## இருக்கிறது





## புத்திசாலிகள் ஷாலிமார் பெயின்டையே





## உபயோகிக்கிறார்கள்.

SPX 83ATM






**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.**

POST BOX 136, MADRAS 1

Importers & Distributors for Ceylon :

LEWIS BROWN & CO., LTD., POST BOX 85, COLOMBO




புஷ்யன்

"இங்கு குடியிருக்க ஏதாவது இடம் காலி இருக்குமா?" என்று வீட்டு வாசலில் நின்றுகொண்டிருந்த பெண்ணைக் கேட்டேன்.

"இங்கு ஒன்றும் காலி கிடையாது" என்று கூறிப் 'படா'ரென்று கதவை மூடிக்கொண்டு உள்ளே போய்விட்டாள் அவள்.

இந்தப் பெண்ணுக்கு ஏன் இவ்வளவு கோபம் என்று நான் திகைத்தேன். "ஏண்டி, பெண்ணே, கதவை ஏன் அப்படி உடைக்கிறாய்?" என்று கேட்பது என் காதில் விழுந்தது. அவள், "இல்லையம்மா......" என்று கூறத் தொடங்கினாள். அதற்குள் அந்த அம்மாளே வெளியே வந்து, "அப்பா, அந்தப் பெண் ஏதோ புத்தியில்லாமல் சொன்னதைத் தப்பாக எடுத்துக் கொள்ளாதே. அவளுக்குக் கொஞ்சம் வாய்த் துடுக்கு. எவ்வளவு அடக்கினாலும் அடங்குவதில்லை. அது போகட்டும். உனக்கு வீடு வாடகைக்கு வேணுமா?" என்று கேட்டாள்.

"ஆமாம்" என்று தலையசைத்தேன்.

"நீ ஒருவன்தானா, இன்னும் உன் அகமுடையாள், அப்பா, அம்மா, தம்பி, தங்கைகள் உண்டா?" என்று கேட்டாள்.

"இல்லை, நான் ஒருவன்தான். எனக்கு இன்னும் கலியாணமாகவில்லை. என் தாயார் தகப்பனார் எல்லோரும் தண்ணீர்க் குளத்தில் இருக்கிறார்கள். எனக்கு வேண்டியது தங்குவதற்கு ஒரு அறைதான்" என்றேன்.

"நீ எங்கே உத்தியோகம் பார்க்கிறாய்?"

"முன்சீப் கோர்ட்டில், மாமி!"

"சரிதான்...மாடிமேலே ஒரு அறை இருக்கிறது. போய்ப் பார். பிடித்தால் எடுத்துக் கொள்" என்று கூறி என்னை மேலே அழைத்துச் சென்றாள் அந்த அம்மாள்.

மேலே போய்ப் பார்த்தேன். அந்த அறையில் என் முகத்தில் கதவை அறைந்த அதே பெண் உட்கார்ந்திருந்தாள். என்னைக் கண்டதும் என்னை எரித்துவிடுபவள்போல் பார்த்துவிட்டுக் கீழே மடமட வென்று இறங்கிப் போய்விட்டாள்.

அந்த அறை மிகவும் அழகாக வைத்துக் கொள்ளப்பட்டிருந்தது. மேஜைமேல் அலங்காரமான கண்ணாடி, சுவரில் அழகிய படங்கள், ஒரு புஸ்தக ஸ்டாண்டு, ஒரு சிறிய பீரோ எல்லாம் இருந்தன. அறையின் நான்கு புறங்களிலும் ஜன்னல்கள் இருந்தன. அவைகளுக்கு நீலவர்ணத் துணியில் பாதி வரைக்கும் திரைகள் போடப்பட்டிருந்தன.

"பிடித்திருக்கிறதா, உனக்கு!......இதை அவள் உபயோகித்துக்கொண்டு வருகிறாள். நீ ஒப்புக் கொண்டால் சாயந்திரமே காலி பண்ணச் சொல்கிறேன்" என்றாள்.

"இந்த அறை ரொம்பவும் திவ்யமாக இருக்கிறது, மாமி! வாடகை?" என்றேன்.

"பதினைந்து ரூபாய்..." என்றாள்.

'ஆகட்டும்' என்று சொல்லிச் சாயந்திரமே ஹோட்டலிலிருந்து என் சாமான்களைக் குதிரை வண்டியிலேற்றிக் கொண்டு வந்து விட்டேன். மாடியறை எனக்காக நன்றாக ஒழித்து விடப்பட்டு, பெருக்கிச் சுத்தமாக வைக்கப்பட்டிருந்தது.

"மேஜையை மட்டும் உனக்கு உபயோக மாக இருக்கும் என்று எண்ணி வைத்திருக் கிறேன்" என்றாள் அந்த அந்த மாமி.

"ரொம்ப சந்தோஷம், மாமி!" என்று என் சந்தோஷத்தைத் தெரிவித்தேன்.

## 2

இரண்டு நாட்கள் கழிந்தன. அன்று சாயந்திரம் ஆபீஸிலிருந்து வந்ததும் பொழுது போகாமல் மாடிக் கைப்பிடிச் சுவரின்மேல் உட்கார்ந்து கொண்டேன். என்னைப் போலவே பக்கத்துவீட்டு மாடியி லும் ஒரு வாலிபன் மாடிக் கைப்பிடிச் சுவரில் வந்து உட்கார்ந்து கொண்டான். அவன் என்னைப் பார்த்தான். நானும் அவ னைப் பார்த்தேன். அவன், "நீங்கள்......" என்று கூறி இழுத்தான்.

"நான் இரண்டு நாட்களுக்கு முன்புதான் இந்த அறைக்குக் குடிவந்தேன். முன்சிப் கோர்ட்டில் குமாஸ்தாவாக இருக்கிறேன். நீங்கள் என்ன செய்கிறீர்கள்?" என்றேன்.

"நான் பி. எஸ். ஸி. படிக்கிறேன்."

"என் அறைக்கு வாருங்களேன்! எனக்கும் பொழுது போகவில்லை. பேசிக்கொண்டிருப் போம்" என்று கூப்பிட்டேன்.

அன்றிலிருந்து நானும் வேங்கடராமனும் வெகு அன்னியோன்னியமாகி விட்டோம்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை மத்தியானம் பொழுதே போகவில்லை. மேஜை டிராயரைத் திறந்தேன். ஒரே குப்பையும் கூளமுமாக இருந்தது. சரி, அதையாவது ஒழுங்காக வைக்கலாம் என்று நினைத்து அதில் இருப் பனவற்றையெல்லாம் எடுத்து மேஜைமேல் வைத்து டிராயரை வெளியே எடுத்தேன். பொத்தென்று ஒரு கவர் கீழே விழுந்தது. அதன்மேல் 'சாந்தா' என்று எழுதி யிருந் தது. இது எப்படி இந்த டிராயருக்கு வந் தது என்று ஆச்சரியப்பட்டேன். நான் குடி வந்தபோது மேஜை டிராயர் காலியாகத் தானே இருந்தது? அப்புறம் யோசித்த போது, டிராயருக்கும் மேஜைக்கும் இடை யில் இது அகப்பட்டுக் கொண்டிருக்கும். அதைச் சாந்தா கவனிக்காமல் விட்டிருந் திருப்பாள் என்ற முடிவுக்கு வந்தேன்.

கடிதத்தைச் சாந்தாவிடம் சேர்த்துவிட லாம் என்று நினைத்து அதைக் கையில் ஏந்திய வாறு வாசற்படியை நோக்கி நடந்தேன் 'யார் எழுதி யிருக்கிறார்கள்? என்ன எழுதி யிருக்கிறார்கள்? பார்க்கலாமா?' என்று சபலம் தட்டிற்று. பிறர் கடிதங்களைப் பார்க்க லாகாது என்ற எண்ணமே தோன்றவில்லை. அடுத்த கணம் கைகளும் கண்களும் என் சபலத்தைச் செயலாக்கி விட்டன. அதைப் படித்த எனக்கு ஒரே ஆச்சரியமா யிருந்தது.

"என் பிரேம ராணி சாந்தாவுக்கு......" என்று ஆரம்பித்திருந்த கடிதத்தை முழுதும் படித்துவிட்டுத்தான் மூச்சு விட்டேன்.

அது பெரிய காதல் கடிதம். அதில் தன் இதயத்தைத் திறந்து காட்டி யிருந்தான் பக்கத்து வீட்டு வேங்கடராமன்.

இந்தக் கடிதத்தை என்ன செய்வதென்று எனக்குப் புரியவில்லை. கடைசியில் சாந்தா விடமே கொடுத்து விடுவது என்று நிர்மா னத்துடன் கீழே இறங்கிப் போனேன். வாசற் பக்கத்து அறையில் சாந்தா டிரஸ் செய்து கொண்டிருந்தாள். அவளுடைய வாய் ஏதோ ஹிந்தி 'ட்யூனை' முணுமுணுத் துக் கொண்டிருந்தது. அவள் எங்கோ கிளம்பிக் கொண்டிருக்க வேண்டுமென்று தோன்றியது. அந்தச் சமயத்தில் அந்தக் கடிதத்தைக் கொடுத்து அவள் மகிழ்ச்சிக்குக் குந்தகம் விளைவிக்க நான் விரும்பவில்லை. ஆகவே, அந்தக் கடிதத்தைப் பத்திரப் படுத்தி விட்டு நான் மறுபடியும் டிராயரைச் சீர் செய்யும் வேலையில் ஈடுபட்டேன்.

மாடிப்படிகளில் யாரோ ஏறி வரும் சத்தம் கேட்டது. வேறு யாராக இருக்கும். வேங்கடராமன்தான் என்று திரும்பிப் பார்க் காமலே, "வா, வேங்கடராமா!" என்றேன். ஆனால், "நான் வேங்கடராமனில்லை" என் றாள் அந்த வீட்டுக்கார மாமி.

---



தகப்பனார் :—அம்பி, ஜன்னல் வெளியே கை நீட்டி மழை பெய் கிறதா, பார்!

பையன் :—ரொம்பச் சோம்பலாக இருக்கிறது, அப்பா! நம்ப நாயை வெளியில் அனுப்பித் திரும்பி வந்த பிறகு அதன் முதுகைத் தடவி, ஈரமாக இருக்கிறதா என்று பார்த் துத் தெரிந்து கொள்ளேன்!

"என்ன மாமி? என்ன வேண்டும்?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை. ஒரு நல்ல சினிமா வந்திருக்கிறதாம். ரொம்ப நன்றாயிருக்கிறதாம். நானும் சாந்தாவும் போகலாம் என்று பார்க்கிறோம். நீ துணைக்கு வருகிறாயா?" என்று கேட்டாள்.

எப்படி மறுப்பது? எனக்கும் பொழுது போகவில்லை. "சரி, வருகிறேன்" என்றேன்.

அன்றிலிருந்து சாந்தாவின் சுபாவத்தில் ஒரு மாறுதல் இருந்தது. அவ்வப்போது என் அறைக்கு வருவாள். என்னிடமிருக்கும் புத்தகங்களைப் படிப்பதற்கு வாங்கிக் கொண்டு போவாள். இருவரிடையேயும் இருந்த கடுகடுப்புப் போய் சுமுகமான பாவம் நிலவிற்று.

அன்று சாந்தா என் அறையில் வந்து அலமாரியில் தனக்கு வேண்டிய புத்தகம் ஒன்றை எடுத்துப் போவதற்குப் புத்தக அடுக்கைக் கிளறிக் கொண்டிருந்தாள். அப்போது வேங்கடராமன் என் அறைக்கு வந்தான். அவன் வருவதைக் கண்டதும் சாந்தா சட்டென்று கீழே இறங்கிப் போய் விட்டாள். வேங்கடராமன் அவள் போன திக்கையே பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய முகத்தைப் பார்க்க எனக்குப் பரிதாபமாக இருந்தது. பாவம், அவனால் முன்போல் சாந்தாவுடன் சகஜமாகப் பேச முடியவில்லை. நான் ஒருவன் குறுக்கே வந்ததுதான் அதற்குக் காரணம்.

அவர்கள் இருவரையும் எப்படியாவது ஒன்று சேர்த்து வைக்க வேண்டும் என்று தோன்றியது. அதற்கு என்ன வழி என்று யோசித்தேன். ஆமாம், நாம் இந்த மாடி அறையை வேண்டாம் என்று சொல்லிக் கீழே உள்ள அறையை எடுத்துக் கொண்டு விட்டால் சாந்தாவும் வேங்கடராமனும் ஒருவருடன் ஒருவர் முன் போல் மாடியில் நின்றவாறே பேசி மகிழ்வார்க ளல்லவா? அப்புறம் மாமியிடம் சொல்லிக் கல்யாணத்தை முடித்து வைத்து விடலாம் என்று தீர்மானித்தேன்.

சாந்தாவின் தாயாரிடம், "மாமி, எனக்குக் கீழே இருக்கும் அறையையே கொடுத்து விடுங்கள். மாடி அறை எனக்கு அவ்வளவு சௌகரியமில்லை. அடிக்கடி நண்பர்கள் வருகிறார்கள். உன் ஹாலில் நுழைந்து மாடிப்படி ஏறி வருவது என்றால் உங்களுக்கும் அசௌகரியமாக இருக்கும்" என்றேன்.

"யார் அப்படி வேண்டப் படாத அன்னிய சிநேகிதர்கள் வருகிறார்கள்? மாடியறை மாதிரி அவ்வளவு சௌகரியமாகக் கீழே காற்று வராதே!" என்றாள் மாமி.

"பரவாயில்லை, மாமி!" என்றேன்.

"சரி, உன் இஷ்டம்" என்று கூறிவிட்டாள். அன்றே கீழ் அறைக்கு என் ஜாகையை மாற்றிக் கொண்டு விட்டேன்.

"சாந்தா, உனக்குச் சந்தோஷம்தானே? உன் அறையை அபகரித்துக் கொண்டுவிட்டேன் என்று என்மேல் முன்போல் கோபப் படமாட்டாயே?" என்று கேட்டேன்.

அவள் ஒரு புன்னகை பூத்தாள். அதில் அவளுக்கு என்னிடம் உண்டான நன்றியறிதல் தென்பட்டது. ஒரு பெரிய கடமையைச் செய்து விட்டோம் என்று பூரித்தேன்.



## 3

இரண்டு நாட்கள் சாந்தா என் கண்களில் படவேயில்லை. மாடி அறையிலேயே வாசம்போல் இருக்கிறது. சரிதான், காதலனுடன் பேசிக் குலவுவதில் தன்னையே மறந்துவிட்டாள் என்று நினைத்தேன்.

மூன்றாம் நாள் சாந்தா என் அறைக்குள் நுழைந்து, "இந்தாருங்கள், இந்தப் புத்தகத்தை இரண்டு நாட்கள் இரவும் பகலுமாக ஓய்வில்லாது படித்து முடித்து விட்டேன். மிக சுவாரசியமாக இருந்தது. உள்ளத்தை அப்படியே கொள்ளை கொண்டு விட்டது. கீழே வைக்கவே முடியவில்லை... வேறு ஏதாவது புத்தகம் இருந்தால் கொடுங்களேன்!" என்றாள்.

"நான் தர வேண்டுமா, என்ன? நீயே பார்த்து எது வேண்டுமோ, அதை எடுத்துக் கொள்ளேன்!" என்றேன்.

அவள் அலமாரியைத் துழாவிக் கொண்டிருந்தாள். அவளுடைய நீண்ட பின்னல் கழுத்து வழியாக வந்து கீழே தொங்கிக் கொண்டிருந்தது. அவளை அடையப்போகும் வேங்கடராமன் அதிர்ஷ்டசாலிதான். முத

வில். அதாவது வந்த புதிதில் சாந்தாவை ரொம்பவும் அகங்காரம் பிடித்தவள் என்று தவறாக எண்ணி விட்டேன். ஆனால் அவள் ரொம்பவும் பச்சைக் குழந்தையைப் போன்ற உள்ளம் உடையவள். மனதில் பட்டதைப் பேசி விடுவாள். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசத் தெரியாது.

வேங்கடராமன் அவளுக்கு எழுதிய கடிதம் எனக்கு ஞாபகத்துக்கு வந்தது. அவளுடைய காதலைப் பரிசோதிக்க நினைத்தேன்.

"சாந்தா, இப்போது மாடியறை மறுபடியும் கிடைத்தது ரொம்பவும் சௌகர்யமாக ஆகிவிட்டது இல்லையா? எல்லாவற்றுக்கும் சௌகர்யமாக நல்ல காற்று, நல்ல காட்சிகள் சுற்றுமுற்றும்......"

"ஆமாம், இத்தனை நாள் இந்தக் கீழ் அறையில் அடைந்து கிடந்தது எனக்கு மிகவும் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால் உங்கள் கஷ்டத்தைப் பாராமல் அந்த அறையை எனக்குக் காலிபண்ணி விட்டீர்களே, உங்களுக்கு எப்படி என் நன்றியைத் தெரிவிப்பதென்றே தெரியவில்லை" என்றாள்.

"எப்படி நன்றி தெரிவிக்க வேண்டும், தெரியுமா?" என்று கேட்டேன்.

"எப்படி?" என்று கேட்டாள் சாந்தா.

"கல்யாணச் சாப்பாடு சீக்கிரம் போட வேண்டும்!"

"ஆமாம், உங்களுக்கு எப்பொழுதும் கேலிதான்!" என்றாள் ஒய்யாரமாகத் தன் இரு விழிகளாலும் என்னைப் புன்னகை கலந்த கோபத்துடன் பார்த்துக் கொண்டே.

"உள்ளதைச் சொன்னால் ஏன் உனக்குக் கோபம் வருகிறது? உனக்குச் சீக்கிரம் கல்யாணம் செய்து வைக்க ஏற்பாடு பண்ணப் போகிறேன். பாவம், எத்தனை நாட்கள் தான் மாடியில் நின்று கொண்டு ஒருவரை யொருவர்......"

சாந்தா திடீரென்று, "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"ஏன் சாந்தா அப்படிப் பயப்படுகிறாய்? நான் கண்டு பிடித்து விட்டேன் என்றா? எல்லாம் எனக்குத் தெரியும். என்னிடம் நடக்குமா உன் ஒளிவு மறைவு எல்லாம்? நீயும் வேங்கடராமனும் எப்படி ஒருவரை யொருவர் நேசிக்கிறீர்கள் என்றும்..."

இதை நான் சொல்லி முடிப்பதற்குள் சாந்தா, "ஐயோ, எல்லாம் பொய். நானும் வேங்கடராமனும்..." என்று ஏதோ கூற வாயெடுத்தாள்.

"பதறாதே, சாந்தா! நான் உன் காதலுக்கு இடைஞ்சலாக இருக்கிறேன் என்று எண்ணாதே. நான் உன் தாயாரிடம் சொல்லி எல்லா ஏற்பாடும் செய்கிறேன். பாவம், உன் கட்சியை எடுத்துச் சொல்ல இத்தனை நாட்கள் யாரும் இல்லாததால் கஷ்டப்பட்டாய். இனி அந்தக் கவலை வேண்டாம்."

"நீங்கள் பேசாமல் இருக்க மாட்டீர்கள்? நான் ஒன்றும் வேங்கடராமனைக் காதலிக்கவில்லை!" என்றாள் சாந்தா.



மனைவி :— நாம் வேலைக்காரியை அனுப்பி விட்டால் நம்மைப் பற்றி அண்டை அயலில் என்ன நினைப்பார்கள்?

புருஷன் :— வேலைக்காரி போன பிறகு அவர்கள் பேசிக் கொள்ளுவது தான் நமக்குத் தெரியப் போவதில்லையே!

---

"எல்லாம் எனக்குத் தெரியும். இதோ பார், உங்கள் காதல் கடிதம்! இன்னுமா என்னிடம் மறைக்கிறாய்? உங்களிருவர் கல்யாணத்தையும் கண்டு களித்து விருந்து சாப்பிட்டால்தான் எனக்கு மனம் நிம்மதியடையும்" என்றேன் நான்.

என் கையில் கடிதத்தைக் கண்டதும் சாந்தாவின் முகத்தில் வியர்வை சட்டென்று அரும்பியதையும், பயம் ஏற்பட்டதையும் கண்டேன். அவள் திடீரென்று பாய்ந்து என் கையில் இருந்த கடிதத்தைப் பிடுங்கிக் கொண்டு, "இந்தக் கடிதம் உங்களுக்கு எப்படி அகப்பட்டது?" என்று கேட்டாள்.

"எப்படியோ அகப்பட்டது. அதனால் என்ன? இப்போது ஒப்புக் கொள்கிறாயா உங்கள் காதலை? காதலர்கள் எப்போதும் அப்படித்தான் முதலில் மறுப்பது வழக்கம். ஆனால் உன் முகத்தில் தோன்றும் பாவம் எனக்கு எல்லா உண்மையையும் அறிவுறுத்தி விட்டது!" என்றேன் சிரித்தவாறே.

"ஆமாம், அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்!" என்று அழகு காண்பித்தவாறே அந்தக் கடிதத்துடன் மாடியறைக்கு ஓடி விட்டாள் சாந்தா.

சரி, இனித் தாமதம் செய்யக் கூடாது உடனே அவளுடைய தாயாரிடம் கூறிக் கலியாணத்தைச் சீக்கிரம் முடித்துவிட வேண்டுமென்று தீர்மானித்தேன்.

அன்று சாயந்திரமே ஆபீஸிலிருந்து வந்ததும் சாந்தாவின் தாயாரிடம் போய், "மாமி, ஒரு சமாசாரம்!" என்றேன்.

"என்ன, அப்பா!" என்று கேட்டாள்.

"எனக்கு எப்போது கலியாணச் சாப்பாடு போடப் போகிறீர்கள்?" என்று வேடிக்கையாகக் கேட்பது போல் கேட்டேன்.

"கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல் நீயே இந்த விஷயத்தை ஆரம்பித்தாயே, அப்பா! நானே உன்னைக் கேட்க நினைத்தேன். நீதான் ஏதாவது நல்ல வரனாகப் பாரேன்!" என்றாள்.

"பார்ப்பதென்ன, மாமி! கையிலேயே வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவானேன்?"

"நானும் யோசித்தேன். ஆனால் நீ சம்மதப் பட வேண்டுமே என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். உன் ஜாதகம் கையிலே இருக்கிறதா? ஊரிலிருந்து வரவழைக்க வேணுமா?" என்று கேட்டாள் மாமி.

"ஐயையோ! நான் என்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ள வில்லை, மாமி! பக்கத்து வீட்டு வேங்கடராமனை யல்லவா நான் சொல்லுகிறேன்?" என்றேன்.

"வேங்கடராமனையா? அதை யெல்லாம் நான் முன்னமே பார்த்துக் கைவிட்டாயிற்று. அந்தப் பெண்ணுக்கு அவனைப் பிடிக்கவில்லை யாம்" என்றாள் மாமி.

என் காதுகளை என்னால் நம்பமுடியவில்லை. "என்ன! வேங்கட ராமனைப் பிடிக்க வில்லையா?" என்று வியப்புடன் கேட்டேன்.

"ஏன் அப்படி அதிசயப் படுகிறாய்? அவனைக் கல்யாணம் செய்து வைக்க வேண்டுமென்று நான் பிரயத்தனப் பட்ட போது அவள் ஓரேயடியாக உட்கார்ந்து அழ ஆரம்பித்து விட்டாள். அதென்னவோ அவனை அவளுக்குப் பிடிக்க வில்லையாம், உன்னைத் தான் பிடித்திருக்கிறதாம்!" என்று கூறினாள் சாந்தாவின் தாயார்.

"என்னைத் தான் பிடித்திருக்கிறதா?" என்று மேலும் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"நீ என்றைக்கு இந்த வீட்டுக்குக் குடி வந்தாயோ அன்றே அவளுடைய போக்கில் மாறுதலைக் கண்டு விட்டேன். அவள் புத்தகத்தில் கண்ட இடமெல்லாம் உன் பெயரைக் கிறுக்கி வைத்திருக்கிறாள். அசட்டுப் பெண்!" என்றாள் சாந்தாவின் தாயார்.

எனக்குத் தலை 'கிர்' என்று சுற்றியது. ஒன்றும் பேசத் தோன்றவில்லை. பெண்களின் உள்ளம் ஆழம் காண முடியாதது என்று சொல்லுகிறார்களே, அது எவ்வளவு பொருத்தமானது!

## 4

"ஏன் சாந்தா, உனக்கு உண்மையில் வேங்கடராமன் பேரில் ஆசை யில்லையா? பின் ஏன் இந்தக் காதல் கடிதத்தைப் பத்திரப்படுத்தி வைத்தாய்?" என்று சாந்தாவைக் கேட்டேன். அவள் என் எதிரே தரையைப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தாள்.

"நான் ஒன்றும் அதைப் பத்திரப்படுத்தி வைக்கவில்லை. அந்தக் கடிதத்தைப் படித்ததும் அதைக் கிழித்துப் போட வேண்டுமென்று நினைத்தேன். அப்போது சட்டென்று என் அம்மா அறைக்குள் வந்து விட்டாள். அதனால் அம்மா போனதும் கிழித்து எறிந்து விடலாம் என்று அதை மடித்து டிராயரில் போட்டு விட்டேன். ஆனால் அம்மா என்னைக் கீழே டிபன் சாப்பிட அழைத்துக் கொண்டு போனாள். அப்புறம் அந்தக் கடிதத்தை மறந்தே விட்டேன்" என்றாள்.

"சரி, ஆனால் இன்னொரு விஷயம். நான் மாடியறையை ஆக்கிரமித்துக் கொண்ட போது உனக்கு என் மேல் பொல்லாத கோபம் உண்டாயிற்றே! ஆகவே, உங்கள் இருவருக்கும் காதல் பூத்திருக்குமோ என்று நினைத்து விட்டேன்" என்றேன்.

"எனக்கு மாடியறைமேல் தனி பிரேமை. நீங்கள் சொன்னது போல் அங்கிருந்து நாலா பக்கமும் அழகிய காட்சிகள் தென்படுவது. நல்ல காற்று இதற்கெல்லாம் முற்றுப் புள்ளி வைத்து விட்டீர்களே என்றுதான் கோபம். இப்போது கூட...."

"இப்போது கூட நான் உன் அறைக்குப் போட்டிக்கு வரக்கூடாதாக்கும்!"

"இனி போட்டி என்ன? நம்மிருவருடைய அறைதானே அது...."

"ஓகோ, நீ தீர்மானித்து விட்டாயா?"

"ஆம்..." என்று வலித்து விட்டு உள்ளே ஓடி விட்டாள் சாந்தா. இரண்டாம் முறையாக என் சாமான்களை யெல்லாம் மாடியறைக்கு மாற்ற வேண்டி வந்து விட்டது.




கார்ப்பரேஷன் காரில் போகும் நாய் தன் மனைவியிடம்:—"கண்ட நாயெல்லாம் காரில் சவாரி செய்கிறது. நாம்தான் காரில் போகக் கொடுத்து வைக்கவில்லை!" என்று சொல்லிக் கொண்டிருந்தாயே! இப்பொழுது உனக்குத் திருப்திதானே?

# நீங்கள் தூங்கும்போதே போஷாக்கு.



தற்கால நிலைமைகளினால் உமது பலம், சக்தியும் அதிகமாக விரயமாகிறது. இதை ஈடு செய்வது ஆழ்ந்த சுக நித்திரைதான். இரவில் நல்ல தூக்கமில்லையேல் மறுநாள் வேலைக்குச் சக்தியே இருக்காது. தினசரி படுக்கைக்குப் போகுமுன் ஓவல்டின் சாப்பிடுங்கள். அது நல்ல அயர்ந்த நித்திரை தர உதவுகிறது. மேலும் உங்கள் தூக்கத்திலேயே அடுத்த நாளுக்கு வேண்டிய உடல், நரம்புகளுக்குப் பலம் தரக் கூடிய போஷணை அளிக்கிறது. ஓவல்டினில் சுத்தமான பசுவின் ஏட்டுப் பால், பழுத்த பார்லி மால்ட், கொக்கோ, சக்திதரும் இயற்கையான உணவுகளும், பாஸ்படைட்கள் பி & டி விடமின்களும் இருக்கின்றன. ஓவல்டினில் இருக்கும் போஷாக்கு மற்றும் விடமின் சத்துக்கள் இன்றியமையாதவை. ஓவல்டினை விடச் சிறந்தது வேறு கிடையாது.

டாக்டர்கள் எங்கும் இதைச் சிபார்சு செய்கிறார்கள். போலிகளைத் தள்ளி விடுங்கள்.

விநியோகஸ்தர்கள் : கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.




## ஓவல்டின்

ஆழ்ந்த சுகமான நித்திரைக்கு

OV.328

# சலனத்துக்குப் பின்...

துரோணன்

தெருக் கோடியில் வந்து கொண்டிருந்த புதுத் தாசில்தார் வீட்டு 'மாப்பிள்ளை யழைப்பு' ஊர்வலம் படாடோபத்துடன் ஊரையே இரண்டு படுத்திக் கொண்டிருந்தது. வெளியூரிலிருந்து வந்திருந்த அந்த நாதஸ்வர வித்வான்கள் பைரவி ராகத்தை மாற்றி மாற்றிப் பொழிந்து கொண்டிருந்தனர். அவர்களைப் பொறுத்த வரையில் — ஏன்—இன்னும் அங்கே கூடியிருந்த ரசிக கூட்டத்தையும்கூட அனுசரித்த வரையில் — அது தேவகான மாகத்தான் அமைந்திருந்தது. அவர்களுடைய கற்பனைத் திறனையோ, ஆழ்ந்த ஞானத்தையோ எடுத்து அம்பலப்படுத்த இது ஒரு நல்ல சந்தர்ப்பம்தான். ஆனாலும் இதே நிட்டத்திற்கு வேறு எத்தனை ராகங்கள் இல்லை! இதை வாசிக்க ஆரம்பித்து ஏன் என் மனதின் அடிவாரத்தில் ஜ்வாலையுடன் நீறு பூத்த நெருப்பாகி யிருக்கும் புண்ணை ஊதிக் கிளற வேண்டும்!

ஜன்னலோரத்தில் சிலையாகச் சமைந்திருந்த எனது உள்ளம் அக்கக்கான ராகச் சிதல்கள்போல் சிதறிக் கொண்டிருந்தன. என் எதிரே — அந்த அப்பாவிப் பெண் — வைதேகி துவண்ட கொடிபோல் படுத்திருந்தாள். அவளது சுருண்டு வளர்ந்த கேசம் அழகாக அவளது நெற்றியில் படிந்திருந்தது. அவளது இலேசான புன்னகையிலின்றும், அவள் இருதயத்தில் ஏதோ ஒரு ஆனந்தக் கனவின் இயக்கம் நடந்து கொண்டிருப்பது நன்றாகத் தெரிந்தது. பாவிப் பெண்— ஏன் இப்படி என் வயிற்றில் வந்து பிறந்து, தானும் சுகப்படாமல் என்னையும் இப்படி உயிருடன் சித்திரவதை செய்ய வேண்டும்!

பெண்ணிற்கு அழகு மட்டும் இருந்து விட்டால் சரியாகி விடுகிறதா! 'அதிர்ஷ்டம்' என்ற பெயருடன் ஒன்று அலாதியாகவும் இருக்கத்தானே வேண்டி யிருக்கிறது! ஏதோ ஒரு காட்டிற்குள் சந்திரபிம்பமான சகுந்தலை யிருந்தாள். எங்கிருந்தோ ஒரு துஷ்யந்த மகாராஜன் வந்து சேர்ந்தான். அது காட்டுப் பெண்ணோ, காட்டுப் பெண்ணோ வென்று சிந்தித்தானா! தினமும் எவ்வளவோ ராஜகுமாரிகளையும், அழகிகளையும் பார்த்த அதே கண்களால்தானே இவளையும் பார்த்தான்! அழகுக்கு அடிமைப்பட்டுத்தானே அவளை ஏற்றுக் கொண்டான்! அப்படி யெல்லாம் இந்தக் காலத்தில் நடப்பதா யிருந்தால், இந்தப் பாவியின் பெண் — கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் ஏன் இப்படிக் குருட்டுக் கனவுடன் என் எதிரில் விழுந்து கிடக்க வேண்டும்!

மூன்று மாதங்களுக்கு முன் இதே போன்ற ஊர்வலம், இதேபோன்ற 'காஸ்' விளக்குகளுடன் பெருமாள் கோயிலிலிருந்து புறப்பட்டது. அந்தப் பாவிகளும் அன்றைக்கு இப்படித்தானே பைரவி ராகத்தை ஊதி ஏழு ஊரையும் கூட்டி யிருந்தார்கள்! ஆனால், பாவம்! அதிர்ஷ்டமும் விதியும் ஒன்று கூடி இவளைப் பதினாறு வயதுக் கன்னிகையாகவே வைத்திருக்க எண்ணி யிருக்கும் போது நாதஸ்வரக்காரர்களும், ராகமும் என்ன செய்ய முடியும்! ஆறுமாதமாக அரும்பாடுபட்டு, ஆயிரம் ரூபாய் வரதட்சணையும் கொடுத்து, கண்ணைப் போன்ற பெண்ணையும் கொடுத்தால், அந்த அழகு மாப்பிள்ளைக்குப் பிடிக்க வில்லையாம். 'கோணல் வகிடும், குறுக்கு நடையுமான' கோமளாங்கியை நினைத்துக் கொண்டு ஓடினானாம்! இதென்ன உலகம்! சாயம் பூசிய பாத்திரம்போல் வெளிப்புறத்தின் அழகைத்தானே இந்தக் காலத்துப் பிள்ளைகள் ரசிக்கிறார்கள்!

மாப்பிள்ளை யழைப்பெல்லாம் முடிந்து நிச்சய தாம்பூலத்துக்காக ஏற்பாடு செய்து கூப்பிடுவதற்குள் வெறிகொண்ட மிருகம்போல் உதறிவிட்டு ஓடினானே, அவனுக்கு 'மனச்சாட்சி' என்று ஒன்று கிடையாதா! அவனது மனிதர்கள்தானாகட்டும், ஏதாவது சமாதானம் சொல்லி யழைத்து வந்தார்களா! இந்த அனாவசியச் செலவுகளுக்காகப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டால் மட்டும் ஆழமாகக் கீறிவிட்ட மனப் புண்ணுக்கு மருந்தாகி விடுமா! தெளிவுடனிருந்த என் இருதயத்தில் சலனமுண்டாகி இன்றுடன் மூன்று மாதங்களாகி விட்டன.

கொஞ்சம் கொஞ்சமாக நெருங்கிக் கொண்டிருந்த ஊர்வலத்தின் வெளிச்சம் நான் இருந்த ஜன்னலைச் சமீபித்து விட்டது. வீதியில் போய்க் கொண்டிருந்தவர்கள், 'மாப்பிள்ளை அழகா யிருக்கிறான். திருவாரூராம்' என்று பேசிக்கொண்டு சென்றார்கள். 'திருவாரூர்' என்றவுடனேயே எனக்குத் 'திக்' கென்றது. அந்த ஊரின் பெயரைச் சாதாரணமாகக் கூறும்போதே 'அந்தப் பாவி'யின் ஞாபகம் தானே உண்டாகிறது!

ஊர்வலம், தனித் தவுல் ஆவர்த்தனங்களுடன் என்னைத் தாண்டிச் சென்றது. நல்ல வேளையாக நான் எண்ணி எதிர்பார்த்துக் கொண்டிருந்த 'அந்தப் பாவி' மாப்பிள்ளையின் ஸ்தானத்தில் இல்லை. ஏதோ சற்று ஆறுதல். என் விழிகளில் பனித் திவலைகள் போல் நீர் தேக்கமுற்றிருந்தது. ஜன்னல் கதவைச் சாத்திவிட்டுத் திரும்பினேன்.

''என்ன மாமி, சௌக்கியமா!'' என்று வெளிப்புறத்தில் ஒரு குரல் கேட்டது. 'இந்த வேளையில் என்னை யார் விசாரிக்கப் போகிறார்கள்!' என்று எண்ணிக்கொண் டிருக்கும்பொழுதே அதே குரல் மீண்டும் கேட்டது. அது எனக்குச் சற்று வியப்பைக் கொடுத்தது. கண்களைக் கசக்கிக் கொண்டு நோக்கினேன்.

''நான் தான், சுந்தரம்!'' என்று பதில் வந்தது. எனக்குச் சற்று நேரம் என்ன பதில் சொல்வது என்றே புரியவில்லை. அவன்தான் — எனக்கு மாப்பிள்ளையாகி மூன்று மாதமாகியிருக்க வேண்டியவன்—நின்று கொண்டிருந்தான். அதெல்லாம் கிரமத்தில் நடந்திருந்தால் இவனுக்கு இப்பொழுது வரவேற்பு இப்படியா இருக்கும்!

'வாருங்கள்' என்று அழைப்பதற்குக் கூட எனக்குத் தோன்றவில்லை. ''சௌக்கியத்திற்கு என்ன, கடவுளின் தண்டனையை அனுபவிப்பதற்கு இந்தப் பூமியில் இருந்து தானேயாக வேண்டும்!'' என்றேன்.

''கொஞ்சம் வெந்நீர் இருக்குமா!—'' என்றான் கனிவுடன் அவன். அப்பொழுதுதான் என் தவறை நான் உணர முடிந்தது. 'என்னதானிருந்தாலும் உலகானுபவத்தை நாற்பது வருஷங்களாக அனுபவிப்பவளுக்கு வா வென்று அழைப்பதற்குக் கூடத் தோன்றாமலா புத்தி பிசகும்!' என்று

என் மனம் கடிந்து கொண்டது. அடுத்த கணம் பரபரப்புடன் உட்புறம் ஓடிப்போய் 'கெட்டிலில்' இருந்த வெந்நீரை ஊற்றியெடுத்துக் கொண்டு நடை இரேழிக் கதவைத் திறந்தேன். இரேழித் திண்ணையில் சுவாதீனமாக உட்கார்ந்திருந்தான் அவன். கை ராந்தல் விளக்கைப் பெரிதாக்கிக் கொண்டே, "அம்மா அப்பா எல்லாரும் சௌக்கியந்தானே!" என்று கேட்டேன்.

"எல்லோரும் சௌக்கியந்தான். இதோ நடக்கிறதே, தாசில் வீட்டுக் கல்யாணம், அந்த மாப்பிள்ளை ராகவன் எனக்கு உயிர்த் தோழன். அவனுடன் நான் வந்திருக்கிறேன்" என்று பதிலளித்துக் கொண்டு வந்தவன், "நான் அதற்காக மட்டும் வரவில்லை. வேறொரு......" என்றான்.

"வேறென்ன வேலை உங்களுக்கு இந்தக் குக்கிராமத்தில் இருக்க முடியும்!" என்றேன். தூங்கிக் கொண்டிருந்த வைதேகியை எழுப்பி, 'இவள் உனக்குக் கிடைக்கக் கூடியவளா! இவளது முகத்தைச் சற்றுப் பார்; உலகத்தின் கபடமோ சூன்யத்தனமோ இதிலிருக்கிறதா வென்பதைச் சொல்' என்று கேட்க வேண்டும் போல் என் உள்ளம் துடித்துக் கொண்டிருந்தது. ஆனால் அவனது முகம் பரிதாபமாக இருந்தது.

"மாமி, என் பேரில் உங்களுக்குக் கோபம், மனக்கஷ்டம் எல்லாம் இருப்பது நியாயம்தான். பலரும் தூற்றும்படியாக நடந்துவிட்ட சம்பவம் குறித்து மூன்று மாதமாக என் மனம் செய்யும் போராட்டத்தைப் பற்றிக் கூறுவதற்காக நான் தற்போது வரவில்லை. இன்னும் கூறினால், அந்தச் சம்பவம் நடந்தது பற்றிச் சந்தோஷிப்பவன் நான் தான்" என்றான் அவன் அசட்டுச் சிரிப்புடன்.

அவனது வார்த்தையிலிருந்து எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. எரிச்சலும் எல்லை மீறிய ஆக்ரோஷமும் தான் என் அடிவயிற்றில் குமைந்து கொண்டிருந்தன.

அவன் தொடர்ந்து, "நான் அதிகம் பேசி உங்கள் மனதைப் பின்னும் நோகச் செய்ய மாட்டேன். நடந்ததைப் பற்றி மறந்துவிட வேண்டும். என் தம்பி ராகவனை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா!" என்றான் சற்றும் களங்கமற்று.

"ஏன், உன்னைப் போலத்தானே அவனும்! அவனுக்கும் ஏதாவதொரு கலியாணத்தை நிச்சயம் செய்து, ஏதாவதொரு அறியாப் பெண்ணின் இருதயத்தை இதே போல்......" என்று சரளமாக உதிர்ந்து கொண்டிருந்த வார்த்தைகள் என்னையறியாமலே விடுபட்டு விட்டன போலும்!

அவன் தன் இரு கைகளாலும் தலையைப் பற்றிக் கொண்டே சற்று முகம் கவிழ்ந்தான். பின், "மாமி, இதோ ஒரு கடிதமிருக்கிறது. இதை அந்த மறு தினமே எழுதித் தபாலில் அனுப்ப வேண்டுமென்று துடியாக இருந்தேன். பின்னர் ஏதோ யோசனையுடன் இருந்துவிட்டேன். தயவு செய்து, இரண்டே நிமிஷங்களில் நான் கேட்கும் சில கேள்விகளுக்குப் பதில் கூறி என்னையனுப்பி விட்டு, இதைப் படித்துப் பார்க்க வேண்டும். ஆனால் இதிலுள்ள விஷயங்களை யாரிடமும் கூறுவதில்லையென்று உறுதி செய்தபின்னரேதான் இதை நான் உங்களிடம் கொடுக்க முடியும்" என்றான் தாழ்வான குரலில். அவனது நெஞ்சு தழுதழுத்தது. பக்கத்திலிருந்த மிச்ச வெந்நீரையும் ஆவேசம் கொண்டவன்போல் குடித்துவிட்டு என் முகத்தை நோக்கினான்.

மீண்டும் குழப்பம் என் இருதயத்தைப் புகை போல் சூழ்ந்து கொண்டது. "ஏன், உன் தம்பியை



முதல் முதலாகப் பார்த்தபோது, 'இவன்தான் மாப்பிள்ளை' என்று சந்தோஷத்துடன் எண்ணினேன்" என்று ஆரம்பித்தேன்.

"ஆமாம், அவனைப்பற்றித்தான் கூற வந்தேன். அவனை உங்கள் மாப்பிள்ளையாகக் கொள்வதில் உங்களுக்கு ஆட்சேபணை யிராதே!" என்று அதிர்ச்சியானதொரு கேள்வியைத் தடுமாற்றத்துடன் கேட்டு வைத்தான். இந்தக் கேள்விக்கு என்னால் பதில் கூற முடியவில்லை. என் இருதயம் ஏதோ முனகிக் கொண்டிருந்தது. "ஏன், நீ..." என்று ஆரம்பித்தவள், அவனது கவிழ்ந்த முகத்தை நோக்கிவிட்டு நிறுத்தினேன். அவன் எழுந்து கம்பீரமாக என்னை நோக்கிக் கொண்டே, "உங்களுக்குத் திருப்தி யென்பதுதான் உங்களது முதல் வார்த்தையிலேயே புரிந்து விட்டதே! இருந்தாலும், சம்மதம்தான்!" என்று மீண்டும் ஒரே வார்த்தையில் முடியுங்கள். எனக்கும் நாழிகையாகி விட்டது" என்றான்.

"ஏதோ கடவுளின் சித்தம்!" என்று பெருமூச்சுடன் கூறினேன். சுவரிலிருந்த கௌளி 'டிக்டிக்' கென்று ஆமோதித்தது. தாசில் வீட்டு ஊர்வலத்தின் முடிவான கெட்டி மேளம் என் காதுகளைக் கிழித்தது! அதே கணம் என் உடலெல்லாம் மயிர்க்கூச் செறிந்தது.

"ஆமாம், மூத்தவ ளிருக்கும்போது இந்த ஏற்பாட்டுக்கு உன் வீட்டார்கள்..." என்று குறையான வார்த்தையுடன் குழம்பினேன்.

"அதெல்லாம் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். எனக்கும், என் தம்பிக்கும் பூரண சம்மதம். நான் போய் ஏற்பாட்டுடன் எழுதுகிறேன்" என்று கூறிக்கொண்டே பையிலிருந்த கவரை எடுத்து என்னெதிரில் போட்டான்.

"மாமி, உங்களிடம் கூற வேண்டியது ரொம்ப உண்டு. எல்லாவற்றையும் இந்தக் கடிதம் உங்களுக்கு விளக்க வைப்பதுடன், என் பேரிலுள்ள வைஷம்மியமும் நீங்கி விடுவதை யறிவீர்கள். ஆனால், ஸ்திரீகளுக்கென்று ஒரு சாபக் கேடு உண்டே, உங்களுக்குத் தெரியுமா!" என்றான் குறும்புடன் என்னை நோக்கிக் கொண்டே.

"என்ன சாபக் கேடு!" என்றேன்.

"எதையும் இரகசியமாக மனதில் வைத்துக் கொள்ள முடியாததுதான்" என்று கூறி விட்டு இலேசாக நகைத்தான்.

"என்னவோ, அப்படிப்பட்ட தேவ ரகசியமாக இருந்தால் என் மனதை விட்டு அகலாது என் பதை நீ திண்ணமாக நம்பலாம்" என்றேன். அவன் நம்பிக்கையுடன் கவரை என்னிடம் கொடுத்து விட்டு விரைவாக வெளியேறி விட்டான்.

## 2

'இவனுக்கென்ன பைத்தியமா, ஏதாவது வியாதியா அல்லது, பழைய தீர்மானப்படி வேறு ஏதாவதொரு பெண்ணிடம்......' என்று என் மனம் விவாதிக்க ஆரம்பித்தது. கதவைத் தாளிட்டு விட்டு உட்புறம் வந்து வைதேகியை நோக்கினேன். புரண்டு சிரித்தபடியே அவள் ஏதோ முனகிக் கொண் டிருந்தாள்.

ஜன்னல் கதவைத் தாளிட்டு விட்டு, ராந்தல் விளக்கையும் பெரிதாக்கிக் கொண்டு கவரைப் பிரித்தேன். மணி மணியான எழுத்துக்களில் மூன்று பக்கங்கள் எழுதி யிருந்தான்.

"மாமியவர்களுக்கு எழுதியது :

இக்கடிதத்தைத் தாங்கள் எதிர்பார்த்திருக்க மாட்டீர்கள். தங்கள் இருதயம் தற்போது மாறுப் போராட்டத்தில் ஈடுபட்டு என்னைக் கொடுஞ் சாபங்களுக்கு இலக்காக்கிக் கொண்டிருக்கும். ஆனால், உங்கள் இருதயம் மட்டுமல்ல; என் இருதயமும் புண்பட்டு விட்டபின் என்னால் இதைச் சொல்லாம லிருக்க முடியவில்லை. எல்லா ஏற்பாடுகளுமாகி, சாஸ்திரப்படி நிச்சய தாம்பூலம் வாங்கும் சமயத்தில், என் மனம் தாளாமல் ஓடினேன். நீங்கள், உங்கள் மனிதர்கள்—ஏன், உலகமும் கூட எப்படி வேண்டு மானாலும் சொல்லிக் கொண்டிருக்கட்டும். எனக்கு அதைப் பற்றிக் கவலையில்லை. இந்தச் சம்பவத்தால் என் மனம் சாந்தியடைகிறது. கொல்லைப்புற வழியாக நான் சென்று கொண்டிருந்த பொழுது, தற்செயலாக "இனியைப் போன்ற என் பெண்ணிடம் என்ன குறையைக் கண்டு விட்டான்!" என்று தாங்கள் கூறிக் கொண்டிருந்தது என் காதுகளில் விழுந்தது. ஆனால் அந்த நிலையில் நான் பதிலளிக்க முடியவில்லை.

வாஸ்தவம் தான். தங்கள் பெண் 'இனி' என்று சொல்வதுடன் திருப்தியடைந்து விடமுடியாது. கள்ளங்கபடம் சிறிதும் அறியாத பத்தரை மாற்றுத் தங்கம் அவள். இதே காரணம் தான் எனது மனதைப் போராடச் செய்து விரட்டிற்று. புரியாமல் திகைக்கிறீர்களா!

நான் விவாகமே வேண்டாம் என்று எவ்வளவோ பிடிவாதமாக மறுத்தும் என் தாய் தந்தையர் பேராசையின் காரணமாக நிச்சயித்து விட்டார்கள். அதிலிருந்து என் மனத்துக்குக் கடுகளவும் நிம்மதி இல்லை. ஆகவேதான் அன்று நான் 'விவாகமே வேண்டா' மென்று உதறிவிட்டு, உலகத்தின் நிந்தனைகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல் ஓடி வந்து விட்டேன். அதை என் தவறு என்கிறீர்களா! இல்லவே இல்லை!

நான் ஓடி வந்ததைக் குறித்து உலகம் என்ன என்னவெல்லாமோ கதை கட்டி விடுகிறது. விடட்டும். எனக்கு அக்கறை யில்லை. ஏனெனில் நான் செய்த காரியம் சரியானதென்ற பூர்ண நம்பிக்கை எனக்கிருக்கிறது.

அது போகட்டும். இரண்டு வாரங்களுக்குமுன் தங்கள் பெண்ணைப் பற்றிப் பிரஸ்தாபித்து ராகவனை விசாரித்தேன். அவன் எனது நிலை குறித்துச் சிந்தித்து விட்டுத் தன் பூரண சம்மதத்தைத் தெரிவித்து விட்டான். அடுத்த நிமிஷமே என் தந்தையாரின் காலில் விழுந்து எனது தீர்மானத்தைப் பற்றிக் கூறினேன். அரை மணி காலம் வாதாடிய பின், "இனி நான் அந்த இடத்தில் போய் என் கௌரவத்தைக் குறைத்துக் கொள்ள விரும்பவில்லை. அத்துடன் நம் குடும்ப இரகசியம் வெளியாகாவண்ணம் முடியுமானால் நீ நடத்துவதில் எனக்கு ஆட்சேபனையில்லை" என்று குறிப்பான அர்த்தத்துடன் உணர்த்தினர்.

மாமி, நான் உண்மையைக் கூறுகிறேன். என் தகப்பனாரின் சம்மதம் பெற்றுவிட்ட அதே கணம் நான் ஆனந்தமான ஆகாய வெளியில் மிதந்தேன். ஏனென்று கேட்கிறீர்களா! மகாலட்சுமி போன்ற தங்கள் பெண் எங்கள் வீட்டுக்கு வருவதற்கு இன்னும் அரைக்கால் சம்மதம்தான் தேவை என்ற எண்ணத்தினால்தான்!

ஏதேதோ கூறி வளர்த்திக் கொண்டு போகிறேனே என்று நினைக்கிறீர்களா! ஆமாம், அதை... அதை எழுத எனது கை வெட்கத்தின் காரணமாக மறுக்கிறது. தாங்கள் இந்தப் புது சம்பந்தத்திற்கு இசைந்தால்தான் இக் கடிதத்தைக் கொடுப்பது என்ற தீர்மானத்துடன் இதை எழுதினேன்.

எனது குழந்தைப் பிராயத்தில் நாங்களிருந்த பம்பாய் வட்டாரத்தில் சிலரையும், எனது குடும்பமான தாய், தந்தை சகோதரன் இவர்களையும் தவிர, உலகத்திற்கே இந்த நிமிஷம் வரையில் தெரியாத ஒரு ரகசியம் உண்டு. 'சகோதரி' என்ற பாசத்திற்காக ஏக்கமுற்றிருந்த எனது மன நிலை தான் அன்று கல்யாணத்தை உதறிவிட்டு ஓடச் செய்தது. நேரில் தாங்கள் சம்மதித்தபடி தங்கள் பெண்ணின் கல்யாணத்தை இம்மாதக் கடைசி



பெரியவர்:—கடவுள் இல்லை என்று சொல்லாதே அப்பா! கடவுள் இருக்கிறார் என்று நான் சொன்னால்கூட நம்பமாட்டாயா?

நாஸ்திகன்:—அடே! நீ என்ன ஐயா உசத்தி? சாக்ஷாத் கடவுளே வந்து சொன்னாலும் நான் நம்பமாட்டேன்!

யிலேயே சிக்கனமாக, வேண்டுமானால் ஒரு கோவிலிலேயே கூட நடத்திவிட ஏற்பாடு செய்தால், நாங்கள் அதை மறுக்கவில்லை.''

நான் ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தேன். தூக்கத்தில் வைதேகி, ''மாமா பத்திரிகையடிக்கப் போகிறாரா, அம்மா!'' என்ற கேள்வியுடன் பிதற்றிக் கொண்டிருந்தாள். மீண்டும் கைக் காகிதத்தை நோக்கி அவனது கடைசிப் பாராவையும் படித்து முடித்தபோது என் கண்களில் நீர் நிறைந்து விட்டது. ஒரே பெண் பாக்கியத்தைப் பெற்றிருந்த எனக்குப் புதியதானதொரு புத்திர பாசம் பெருக்கெடுத்தது. தங்கு தடையின்றி இனி நடக்கப்போகும் வைதேகியின் வாழ்க்கையைக் குறித்து எனது மனம் திட்டம் வகுத்துக் கொண்டிருந்தது! இப்படியே எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தேன் என்பதுகூட எனக்குத் தெரியாது. ஏனெனில் ''ராகவன் — வைதேகி, வைதேகி—ராகவன்' என்ற பெயர்ப் பொருத்தத்தை ஒப்பிட்டுப் புளகாங்கித மடைந்து கொண்டிருந்தது எனது உள்ளம்.

சுந்தரத்தின் கடிதத்தில் உள்ள கடைசிப் பாராவை மீண்டும் நோக்கிய பொழுது அது எனக்கு மனப்பாட மாகிவிட்டது.

''மீண்டும் கூறுகிறேன். தங்கள் உறுதிமொழியை மறவாதீர்கள். நான் ஒரு இயற்கையான பாப ஜென்மம். அதற்காக நான் வருந்தவில்லை. ஒரு பெண் பாவத்தை மனமறிந்து செய்ய இருந்த என் பெற்றோரையும், கபடமறியாத ஒரு பெண்ணின் வாழ்வையும் காப்பாற்றிய பெருமையும், சாந்தியும் எனக்கு என்றும் நிலவும். புதிதாகப் பழகிய தங்கள் குடும்பத்தின் கண்களுக்கும்—இந்தப் பரந்த உலகத்தின் கண்களுக்கும்தான் நான் ஆண். என்னைப் பொறுத்த வரையில், நான் மனிதனைப் போன்ற ஒரு உருவம் மட்டுமே தான்......''

நான் பரபரப்புடன் எழுந்து சென்று அக் கடிதத்தைக் கிழித்து வெந்நீர் அடுப்பினுள் போட்டுத் திணித்தேன். எனது உள்ளத்தில் மூன்று மாதமாக, இரவு பகல் எந்நேரமும் குழப்பம் கொண்டிருந்த சலனத்திற்குப் பின் இன்றுதான் தெளிவான சாந்தியும், ஆழ்ந்த பாசமும் குடி புகுந்தன!

அதே சமயம் தாசில் வீட்டு மேளக்காரன் வாசித்துக் கொண்டிருந்த பூபாள ராகம் என் செவியில் 'கணீ'ரென்று ஒலித்தது!

# டிரைவரின் தவறு!

பொழுது புலர்ந்தது. பொற் கோழியும் கூவிற்று. மங்களம் 'முருகா, முருகா!' என்று சொல்லிக் கொண்டே எழுந்தாள். குறைத் தூக்கத்தில் இருந்த சம்பந்தம் சட்டென்று விழித்து, ''அடியே! இன்று கிருத்திகை அல்லவா?'' என்றான்.

''ஆமாம், கிருத்திகைதான்!'' என்று சொன்ன மங்களம், ''ஏன்னா! இன்று திருத்தணிக்குப் போய் வந்தால் என்ன?'' என்று கேட்டாள்.

''பேஷாகப் போய் வரலாம். சீக்கிரம் ஸ்நானம் செய்து விட்டுப் புறப்படத் தயாரா யிரு. நானும் இதோ குளித்து விட்டு வருகிறேன்!'' என்று சொல்லிச் சம்பந்தம் எழுந்தான்.

சம்பந்தமும் மங்களமும் குளித்துக் காப்பி சாப்பிட்டு விட்டுப் புறப்படத் தயார் ஆவதும் டிரைவர் வந்து, ''எசமான், இன்று எங்கேயாவது போக வேண்டுமா?'' என்று கேட்பதும் சரியாக இருந்தது.

''வண்டியை எடு. திருத்தணிக்குப் போக வேண்டும்'' என்று சொல்லிய சம்பந்தம் அதிக நேரம் ஆக்காமல் வெகு சீக்கிரமாகவே மங்களத்துடன் வந்து காரில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

வண்டி ஒரு பெட்ரோல் பங்கைத் தாண்டிச் சென்றது. மங்களம் சூடுண்ட பூனையல்லவா? ஆகவே, தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு, ''டிரைவர்! நிறையப் பெட்ரோல் போட்டுக் கொள். அன்று நின்று விட்டதே, அது போல ஆகிவிடப் போகிறது!'' என்று எச்சரித்தாள்.

டிரைவர், ''நிறையப் பெட்ரோல் இருக்கிறது, அம்மா!'' என்று எவ்வளவோ சொல்லியும் அவள் கேட்கவில்லை. வழிய வழியப் பெட்ரோல் போட்டுக் கொண்ட பின்தான் அவனை விட்டாள்.

வண்டி வாயு வேக மனோ வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. கணவனும் மனைவியும் சேர்ந்து கார் சவாரி செய்வது இதுதான் முதல் தடவை. ஆகவே இருவரும் தங்களை மறந்து இன்ப லோகத்திலே மிதந்து இன் சொல்லாடிக் கொண்டே சென்றனர்.

சிறிது தூரம் சென்றதும், ஒரு திருப்பத்தில் 'திடீர் பிரேக்' போட்டு வண்டியை நிறுத்தினான் டிரைவர். பின் ஸீட்டில் இருந்த மங்களத்தின் தலையும் சம்பந்தத்தின் தலையும் ஒன்றோடு ஒன்று 'டணார்!' என்று மோதிக் கொண்டன.

சம்பந்தம் ஆத்திரத்துடன், ''என்ன, டிரைவர்!'' என்று கூச்சலிட்டான்.

டிரைவர் வணக்கத்துடன், ''ஒன்றும் இல்லை, எஜமான்! திருப்பத்திலே குறுக்கே ஒரு மரம் நின்னுக் கிட்டிருக்குங்க! எங்கேயாவது அதிலே மோதி விட்டால் என்ன செய்வது என்று பயந்து 'பிரேக்' போட்டேன்'' என்றான்.

''ஏன், டிரைவர்! ஹார்ன் எதற்காக இருக்கிறது? வெறும் அழகுக்கா? ஹார்னை அடிப்பதற்கென்ன?'' என்று சள்ளென்று விழுந்தாள் மங்களம்.

டிரைவர் தன் தவறை ஒப்புக் கொள்ள வேண்டியதுதானே?

—அக்ஷயம்.

# விற்பனை




## செவர்லெட்

# பழைய பஸ்கள்

# சரசமான விலை

**1943, 1944 & 1945 மாடல்கள்**

**ஸதர்ன் ரோட்வேஸ் லிமிடெட்,**

**மதுரை.**




## 4. புது வேலைக்காரி

திருவிக்குளம் என்பது சொக்கிக் குளம் கிராமத்திற்குத் தெற்கே மூன்று மைல் தூரத்திலிருக்கும் ஒரு சிறிய கிராமம். அங்கே சுமார் பத்துப் பதினைந்து வீடுகள்தான் இருந்தன. அந்தப் பத்துப் பதினைந்து வீடுகளிலும் வசிப்பவர்கள் ஏழைக் குடியானவர்கள். ஆண்களும் பெண்களும் சேர்ந்து உழைத்து ஜீவனம் செய்து வந்தார்கள். அங்குள்ள வீடுகளில் சற்று பெரிதாக உள்ளது முத்தய்யனின் வீடுதான். மற்ற வீடுகளுக்கும் அவன் வீட்டிற்கும் உள்ள வித்தியாசம் என்னவென்றால் அவன் வீடு செங்கல்லாலும் காரையாலும் கட்டப்பட்டது என்பதுதான். மற்றவைகளெல்லாம் சிறு சிறு குடிசைகள். இதைத் தவிர அவன் வீட்டைச் சுற்றிலும் ஒரு தோட்டமும் இருந்ததுதான் விசேஷம். அந்தக் கிராம வாசிகள் மிகவும் ஏழைகளாயினும் காட்டுமிராண்டிகளல்ல. காலப் போக்கில் அவர்கள் கொஞ்சம் நாகரிக மடைந்திருந்தனர்.

முத்தய்யனின் மனைவி செல்வி மிகவும் கல்லவள், கெட்டிக்காரி. ஊரில் முத்தய்யனை விட அவன் மனைவிக்குத்தான் செல்வாக்கு அதிகம். முத்தய்யன் பட்டினத்துக்குச் சென்று காய்கறிகளும் தானியமும் விற்பதையே தன் தொழிலாகக் கொண்டிருந்தான். ஆகவே, தோட்டம் துரவுகளை அவன் மனைவி செல்வியும் அவள் தாயாரும் மகள் பொன்னியும் கவனித்து வந்தனர்.

செல்விக்கு வயது நாற்பதிருக்கும். இந்த வயதிலும் அவளுடைய கட்டுக் குலையாத மேனியையும் முகத் தேஜஸையும் காணும்போது அவள் யௌவனப் பருவத்தில் இன்னும் அழகாக இருந்திருக்க வேண்டும் என்றே எண்ணத் தோன்றியது.

அவளுடைய மகள் பொன்னிக்கு வயது பதினேழு அல்லது பதினெட்டுத்தானிருக்கும். அவளது முகம் எவரையும் வசீகரிக்கக் கூடியதாக இருந்தது. அத்துடன் அவளுடைய தாயார் இந்த வயதில் இவ்வளவு வசீகரமாய்த்தான் இருந்திருக்க வேண்டும் என்பதை நிரூபிப்பதாகவும் இருந்தது. அவளது குறும்பு நிறைந்த பிரகாசமான கண்களும், கருத்துச் சுருண்ட தலைக்கேசத்தின் அழகும், கட்டமைந்த உடலும், சுறு சுறுப்பான துணிகரமான நடத்தையும், வேடிக்கையான பேச்சும் எல்லோரையும் வசீகரிக்கக்கூடியதாக அமைந்திருந்தன.

அன்று காலை மரகதத்தின் வேலைக்காரி செங்கம்மா அந்தச் சிறிய கிராமத்திற்கு வந்தவள் பொன்னியின் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

வாசற் பக்கத்துத் தோட்டத்தில் வேலியின் பக்கத்தில் நின்று கொண்டிருந்த பொன்னி தன் வீட்டை நோக்கிச் செங்கம்மா வருவதைக் கவனித்து விட்டாள். உடனே இந்தச் செய்தியைத் தன் தாயாரிடம் சொல்லுவதற்காக உள்ளே ஓடினாள்.

உள்ளே அவளுடைய தாயார் பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருந்தாள். அவளுடைய பாட்டி தென்னை ஓலையை முடைந்து கொண்டிருந்தாள். "அம்மா, அம்மா! சொக்கிக் குளத்திலுள்ள ராஜாளி மடத்தில் வேலை செய்யும் செங்கம்மா வருகிறாள்" என்றாள்.

"செங்கம்மாவா! அந்தப் பிசாசு இங்கே எதற்கு வருகிறது!" என்றாள் செல்வி வெறுப்போடு. இந்தச் சமயத்தில் வாசற்புறத்து வேலியைத் தாண்டிக் கொண்டு செங்கம்மா தோட்டத்திற்குள் நுழைந்து வீட்டை நோக்கி வந்ததைப் பார்த்து விட்டுப் பொன்னி, அவசர அவசரமாக வாசலுக்கு ஓடி வந்தாள். செங்கம்மா அவளை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "பெண்ணே! உன் தாயார் இருக்கிறாளா! அவளை நான் பார்க்க வேண்டும்" என்றாள்.

அவளுக்குப் பொன்னியைத் தெரியும். அநேகம் தடவை சந்தைக் கடையிலும், மதுராம் பட்டினத்திலும் பார்த்திருக்கிறாள். அவள் ஒரு துடுக்கான பெண் என்பதும் அவளுக்குத் தெரியும்.

பொன்னி அவளைப் பார்த்து, "உங்கள் வீடு மாதிரி இல்லை, எங்கள் வீடு. எங்கள் வீட்டுக்குள் எல்லோரும் தாராளமாக வரலாம்" என்றாள் கிண்டலான உபசாரத்தோடு. செங்கம்மா அவளைத் தொடர்ந்து உள்ளே போனாள். தாழ்வாரத்திலிருந்த செல்லியும் அவள் தாயாரும் சந்தேகாஸ்பதமான கண்களுடன் அவளை வரவேற்றனர்.

"சௌக்கியமா, அம்மா! எங்களுக்கு உதவியாக ஒருவர் வேண்டியிருக்கிறது. நீயாவது உன் மகளாவது கொஞ்ச நாளைக்குச் சொக்கிக் குளத்தில் வந்து வேலை செய்தால் நல்லது. இதைக் கேட்டு விட்டுப் போகத்தான் நான் வந்தேன்" என்றாள் செங்கம்மா.

செல்லி தலையை ஆட்டிக் கொண்டே, "முடியாது. எங்கள் இருவருக்கும் வீட்டு வேலையே பொழுதுக்கும் சரியாக இருக்குது!" என்றாள்.

முன்னைக் காட்டிலும் இப்பொழுது அவள் முகத்திலிருந்த வெறுப்பு அதிகமாகியது. "வேலை அதிகமாக இருக்குமென்று பயப்பட வேண்டாம். தோட்டத்தையும் மாடுகளையும் கவனித்துக் கொண்டால் போதும். வேறு சில சில்லறை வேலைகள் இருக்கும். கொஞ்ச நாளைக்கு இருந்தால் போதும். நல்ல சம்பளம் தருவாங்க. அப்புறம் நிரந்தரமாக ஒரு வேலைக்காரியை வைத்து விடுவோம். இதுவரையில் சின்ன எஜமானி சாரதா அம்மா இருந்ததால் சிரமமில்லாமல் இருந்தது. நேற்று இரவு அவள் இறந்து விட்டாள்" என்று சொல்லிக்கொண்டு வரும்போதே செல்லி திடுக்கிட்டு, "சின்ன எசமானி இறந்துவிட்டாளா! எப்படி இறந்தாள்! உண்மையாக இறந்து விட்டாளா! இல்லை, யாருடனாவது தப்பி ஓடி விட்டாளா!" என்று கேட்டாள்.

செங்கம்மா அவளைச் சுட்டு விடுவது போல் பார்த்தாள். "சொக்கிக் குளம் ராஜராணி மடத்தில் வந்து அவளை யாராலும் கடத்திக்கொண்டு போய்விட முடியாது. நீங்கள் வேண்டுமானால் ஏதாவது ஊர் வம்பு பேசிக் கொண்டிருக்கலாம். எங்கள் எஜமானி அங்கே வசிப்பதற்குக் காரணம் பரிசுத்தமாகவும் சுதந்திரமாகவும் வாழவேண்டுமென்பதற்காகத்தான். வீண் பேச்செல்லாம் எதற்கு! யாராவது வருவதற்குச் சம்மதமா! சீக்கிரம் சொல்லுங்கள்!" என்றாள் கண்டிப்புடன்.

இந்தச் சமயத்தில் தோட்டப் பக்கமாக நின்று கொண்டிருந்த பொன்னி தன் தாயாரைக் கை தட்டி அழைக்கவே செல்லி எழுந்து போனாள்.

"நான் சொல்லுகிறேன். கேளு, அம்மா! நான் அந்த வேலையை ஒப்புக் கொள்கிறேன்" என்றாள் பொன்னி துடிப்போடு.

இதைக் கேட்டதும் செல்லி திடுக்கிட்டாள். "ஹூஹூம்! கூடாது. அந்த வீட்டில் ஒரு பேய் கூடப் போய் வேலை செய்யாது" என்று தீர்மானமாகத் தன் தலையை ஆட்டினாள் செல்லி.

"இல்லையம்மா! நான் ஒன்றுக்கும் பயப்பட மாட்டேன். எனக்கு அந்த வீட்டில் என்னதான் ரகசியமிருக்கிறதென்று பார்க்க ஆசையாக இருக்கிறது. எனக்கு அந்த வேலை பிடிக்காவிட்டால், அங்கிருப்பது நல்லதில்லையென்று பட்டால் நான் திரும்பி வந்து விடுகிறேன். பயப்படாதே, அம்மா!" என்றாள் பொன்னி கெஞ்சுவதுபோல்.

செல்லி சிறிது யோசித்தாள். பொன்னியின் சாமர்த்தியத்திலும் கெட்டிக்காரத்தனத்திலும் அவளுக்கு மிகவும் நம்பிக்கை உண்டு. எப்படிப்பட்ட ஆபத்து வந்தாலும் சமாளித்துக்கொள்ளும் சமயோசித புத்தி அவளுக்கு உண்டு என்பதும் செல்லிக்குத் தெரியும். அவள் வயிற்றில் பிறந்த பெண்தானே! அவள் ஆசையைக் கெடுப்பானேன்! — என்று ஒருவிதமாகச் சம்மதித்தாள். "சரி! உனக்குச் சமத்திருந்தால் செய். ஆனால், ஜாக்கிரதை! அவர்கள் உன்னை ஏதாவது மோசக் கருத்தோடு நடத்த ஆரம்பித்தார்களானால் எப்படியாவது தப்பித்துக் கொண்டு ஓடி வந்துவிடு. தெரிந்ததா!" என்றாள்.

"அதைப் பற்றிக் கவலைப்படாதேயம்மா. நான் ரொம்பவும் ஜாக்கிரதையாகத்தா னிருப்பேன்" என்றாள் பொன்னி.

"நானும் என் மகளும் இதைப்பற்றிப் பேசினோம். அவளுக்கு இந்த வேலையை ஒப்புக்கொள்வதில் ரொம்ப இஷ்டம். அவள் எப்பொழுது அங்கே வரவேண்டும்!" என்று கேட்டாள் செல்லி.

"இன்றைக்கே வந்தால் நல்லது. இப்பொழுதே என்னுடன் கிளம்புவதாக இருந்தாலும் சரி!" என்றாள் செங்கம்மா.

"நான் உங்களோடு இப்போதே கிளம்ப முடியாது. என்னுடைய துணி மணிகளையெல்லாம் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டாமா! நான் சாயந்திரம் ராஜராணி மடத்திற்கே வந்துவிடுகிறேன்" என்றாள் பொன்னி.

செங்கம்மா சிறிது நேரம் ஏதோ யோசித்துவிட்டு, "ரொம்ப சரி! சாயந்திரம் கட்டாயம்



ஞாபகமாக வந்துவிடு'' என்று சொல்லி விட்டு அந்த இடத்தை விட்டுச் சென்றான்.

• • •

அன்று மத்தியானம் மரகதத்தினிடம் செங்கம்மா, ''நீங்கள் சொல்லியபடி நமக்கு வேலைக்கு உதவியாக இன்னொரு பெண்ணை ஏற்பாடு செய்திருக்கிறேன்'' என்றாள்.

''யார் அந்த பெண் !''

''இங்கிருந்து மூன்றாவது மைலில் குருவிக்குளம் என்ற கிராமம் இருக்கிறது. அங்கிருந்து பொன்னி என்ற குடியானவப் பெண்ணை வரச்சொல்லியிருக்கிறேன். கொஞ்சநேரத்தில் வந்துவிடுவாள்.''

''அவள் எப்படிப்பட்ட பெண் !'' என்று கேட்டாள் மரகதம்.

''நல்ல திடசாலியான பெண். ஆனால் கொஞ்சம் வாய்த்துடுக்கு. அதனால் பாதகமில்லை. இப்போதைக்கு நமக்கு யாராவது உதவிக்கு வேண்டுமென்பதற்காகத்தான் அவளைக் கூப்பிட்டேன். அவளை எப்படி நடத்தவேண்டுமென்பது எனக்குத் தெரியும். இந்த நாட்டுப்புற பெண்களையெல்லாம் எப்பொழுதும் ஏதாவது சொல்லி விரட்டிக் கொண்டே இருந்தால் சரியாகப் போய்விடும்.''

''சரி, யாரா யிருந்தாலும் நாமும் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டு மென்பதை மறந்து விடக் கூடாது. முக்கியமாக வேதாவைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டுமே என்பது தான் என் கவலை. அதிருக்கட்டும். பிரேத தகனத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்துவிட்டாயா !'' என்று கேட்டாள் மரகதம்.



''சொல்லி யிருக்கிறேன், அம்மா ! எல்லோரும் சாயந்திரம் வருவார்கள்'' என்றாள் செங்கம்மா.

''சரி ! அவர்கள் வந்தால் இங்கே அதிக நேரம் தாமதிக்கக்கூடாது. தெரிந்ததா ! அதை எங்கே கொண்டு போய்த் தகனம் செய்வார்கள் !''

''இங்கிருந்து இரண்டு மைலில் இருக்கும் காட்டில் கொண்டுபோய்த்தான் தகனம் செய்வார்கள். எப்படித் தகனம் செய்தால் நமக்கென்ன ! அவர்களுக்குக் கூலிதானே !'' என்றாள் செங்கம்மா.

மரகதம் மௌனமாக இருந்தாள். இவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போது வாசற்கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்டது. ''சரி ! நான் சொல்லிய வேலைக்காரப் பெண் பொன்னியாகத்தான் இருக்க வேண்டும். அழைத்துக் கொண்டு வரட்டுமா !'' என்றாள் செங்கம்மா.

''நான் என் அறையில் இருக்கிறேன். நீ அவளுக்கு இங்கே எப்படி இருக்க வேண்டும், எங்கே இருக்க வேண்டும், என்னிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதையெல்லாம் சொல்லு. அப்புறம் நான் அவளைப் பார்த்துக் கொள்கிறேன்'' என்று சொல்லி விட்டு மரகதம் அந்த இடத்தை விட்டு எழுந்து சென்றாள்.

செங்கம்மா வாசற்கதவைப் போய்த் திறந்தாள். பொன்னி ஒரு பெரிய துணி மூட்டையுடன் நின்று கொண்டிருந்தாள். ''வந்து விட்டாயா ! ரொம்ப சரி ! எப்படி வந்தாய்! நடந்துதானே வந்தாய் !'' என்றாள் அனுதாபத்தோடு.

''நடந்து வராமல் என்ன செய்வது! குருவிக்குளத்திலுள்ள ஏழைக் குடியானவன் மகளுக்கு எந்த அத்தான் குதிரை கட்டின ரேக்ளா வண்டியைக் கொண்டு வந்து நிறுத்துவான் !'' என்றாள் பொன்னி அதே பழைய குறும்புடன்.

செங்கம்மாவிற்கு அவளுடைய வார்த்தைகள் எரிச்சலை உண்டாக்கினாலும் சிறிது சிரித்துக் கொண்டே, ''நல்லது இந்த மூட்டையில் என்ன ! உன்னுடைய துணிமணிகளா ! வா, உள்ளே !'' என்று சொல்லியபடியே அவளை அழைத்துக்கொண்டு போனாள்.

அவர்கள் அந்த வீட்டுத் தாழ்வாரத்திற்கு வந்த பொழுது செங்கம்மா கண்டிப்பான குரலில் சொன்னாள். ''உனக்கு இங்கே வேலை நிறைய இருக்கும். கடுமையாக உழைக்கும்படி இருக்கும். அதுவும் தவிர நீ ரொம்பவும் மரியாதையாக நடந்து கொள்ளவேணும். அது தான் ரொம்ப முக்கியம். உன்னுடைய நடத்தையில், பேச்சில் எல்லாவற்றிலும் மரியாதையும் அடக்கமும் இருக்க வேண்டும்'' என்றாள்.

பொன்னி ஒரு தினுசாக அவளை ஓரக் கண்களால் பார்த்து விட்டு, ''இதெல்லாம் எனக்குச் சொல்ல வேண்டாம். யார் யார் எப்படி நடந்து கொள்கிறார்களோ, அப்படியே எனக்கும் நடந்துகொள்ளத் தெரியும் !'' என்று சொல்லி விட்டு, ''அது சரி ! நேற்று சின்ன எஜமானி இறந்து விட்டதாகச் சொன்னீர்களே, அவர்களைத் தகனம் செய்தாகிவிட்டதா !'' என்று பேச்சை வேறு திசையில் திருப்பினாள்.

''அதெல்லாம் இன்று சாயந்திரம் நடக்கும். நான் சொன்னது கவனத்தில் இருக்கட்டும்!'' என்றாள் செங்கம்மா விரைப்பாக.

''சரிதான். பிரேதத்தைச் சுடுகாட்டிற்குக் கொண்டு போய்த் தகனம் செய்யப் போகிறீர்களா, அல்லது இங்கேயே இந்த வீட்டுத் தோட்டத்திற் குள்ளேயே செய்து விடப்

போகிறீர்களா!'' என்று ஒன்றும் அறியாத சிறு குழந்தை போலப் பொன்னி கேட்டாள்.

''அதைப் பற்றி உனக்கென்ன கவலை! எல்லாம் எப்படி நடக்க வேண்டுமோ, அப்படி நடக்கும். உனக்குக் கொடுக்கப்பட்ட வேலையை மாத்திரம் நீ சரியாகக் கவனித்தால் போதும்'' என்றாள் கடுமையான குரலில் செங்கம்மா.

''ரொம்ப சரி! நான் என்ன செய்ய வேண்டும்! அதைச் சொல்லி விடுங்கள். நான் என் வேலையைப் பார்க்கிறேன்!'' என்றாள் பொன்னி மிகவும் அடக்கமும் ஏக்கமும் உள்ளவள் போல்.

''சரி, என்னோடு வா!'' என்று சொல்லி அவளை அழைத்துக் கொண்டு கொல்லைப்புறத்திலுள்ள ஒரு சிறிய அறைக்குச் சென்றாள். அந்த அறையில் விறகும் வரட்டியும் அடுக்கப்பட்டிருந்தன. ஒரு புறமாகக் கந்தல் துணி, கடிதாக முதலிய குப்பைகள் கிடந்தன. சுவரெல்லாம் புகையடைந்து எங்கும் ஒட்டடையும் சிலந்திக் கூடுமாக இருந்தன. செங்கம்மா அந்த அறையைக் காட்டி, ''இதுதான் உன்னுடைய இடம். வேலை நேரம் போக மற்ற நேரங்களில் நீ படுப்பதோ, உன்னுடைய துணிமணிகளை வைத்துக் கொள்வதோ எல்லாம் இங்கேதான்!'' என்றாள்.

பொன்னி சுற்றிலும் ஒரு தடவை பார்த்து விட்டுக் கண்களை அகல விரித்து, ''இங்கேயா நான் படுத்துக் கொள்ள வேண்டும்!'' என்று கேட்டாள் பரிகாசமாக.

''ஏன்! இந்த இடத்துக்கு என்ன!'' என்று கேட்டாள் செங்கம்மா.

''இல்லை, இந்த இடத்தில் எலியும் பெருச்சாளியும் அல்லவா வாசம் செய்கிறதுபோலிருக்கிறது!'' என்றாள் பொன்னி மீண்டும் பரிகாசமாக.

செல்லம்மாவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

''இதைவிட உங்கள் வீட்டில் தரமான இடத்தில் படுத்துக் கொண்டு வழக்கமோ!'' என்று கேலியாகக் கேட்டாள்.

''அதிலென்ன சந்தேகம்! எங்கள் வீட்டு மாட்டுக் கொட்டில்கூட இதைவிடச் சுத்தமாய் இருக்கும். இந்தப் பாழாய்ப்போன அறையில் காற்றோட்டத்திற்கு ஒரு ஜன்னல்கூடக் கிடையாதே!'' என்றாள் பொன்னி அலுப்போடும் வெறுப்போடும்.

''அதற்காக என்னைச் சபிப்பாய்போலிருக்கிறதே!'' என்றாள் செங்கம்மா படபடப்போடு.

''உங்களை நான் சபிக்கவில்லை. இந்த அறையைத்தான் சபிக்கிறேன். இதில் காற்று வருவதற்கு ஏதாவது வசதி செய்தால்தான் என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியும்!'' என்றாள் கண்டிப்பாகப் பொன்னி.

''நீ எப்பொழுதும் இங்கேயே இருக்க வேண்டிய அவசியம் இருக்காது. இந்த வீட்டில் செய்ய வேண்டிய வேலையே உனக்குச் சரியாக இருக்கும். இங்கே உட்கார உனக்குச் சௌகரியம் இல்லாவிட்டால் சமையலறையில் உட்கார்ந்துகொள்ளலாம்'' என்றாள் செங்கம்மா.

''ரொம்ப சரியாய்ப் போச்சு! அப்படின்னு என் பாய், படுக்கை, துணியெல்லாவற்றையும் சமையலறையிலே வைத்துக் கொண்டு விடுகிறேன்'' என்றாள் பொன்னி, குதித்துக்கொண்டே புது வழி ஒன்றைக் கண்டு பிடித்து விட்டவள் போல்.

''அது முடியாது. இந்த வீட்டில் கண்ட இடத்திலெல்லாம் மனம் போனபடி படுத்துக் கொண்டு தூங்க முடியாது. இதையும் குருவிக் குளத்திலுள்ள உங்கள் வீடுமாதிரி நினைத்துக் கொண்டுவிடாதே!'' என்றாள் செங்கம்மா.

இதைக் கேட்டதும் பொன்னிக்குத் திடீரென்று கோபம் வந்துவிட்டது. ''என்ன சொன்னீங்க! இன்னொரு தடவை குருவிக் குளத்தைப் பற்றியோ எங்கள் வீட்டைப் பற்றியோ பேசினால் எனக்குக் கெட்ட கோபம் வந்துவிடும், ஆமாம்! இந்த விநாடியே நான் அங்கே திரும்பிப் போகிறதானாலும் சரி, சந்தோஷமாய்ப் போய் விடுகிறேன். நீங்கள் என்னை யாரென்று நினைத்தீர்கள்! இனிமேல் என்னிடம் இப்படியெல்லாம் பேசக் கூடாது. பாவம்! ஏதோ உதவிக்குக் கூப்பிட்டீர்களே என்றுதான் வந்தேன். என்னை மரியாதையாக நடத்த உங்களுக்கு இஷ்டமில்லை என்றால் சொல்லி விடுங்கள். இதோ போய்விடுகிறேன்'' என்றாள்.

செங்கம்மா இரண்டு கைகளையும் பிசைந்து கொண்டே நின்றாள். கோபத்தால் அவள் கண்கள் சிவந்தன. உதடு துடித்தது. ஆனால் அவள் அப்பொழுது கோபத்தைத் தனக்குள்ளேயே அடக்கிக் கொண்டாள். பொன்னி அடக்கமில்லாமல் அலட்சியமாகப் பேசிய வார்த்தைகள் ஒவ்வொன்றும் அவளுடைய ஆத்திரத்தைக் கிளறி விடுவதாக இருந்தாலும் அந்தச் சமயத்தில் வீட்டு வேலைகளைச் செய்வதற்கு அவளைத் தவிர வேறு ஒருத்தியை அந்த வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வருவது மிகவும் சிரம சாத்தியமான காரியமாகப் பட்டது. ஆகவே, அவளிடம் தனக்குள்ள கோபத்தை அதிகமாகக் காட்டாமல் அடக்கிக் கொள்ள வேண்டியிருந்தது. தங்கள் மனத்திற்குப் பிடித்தபடி வேறு ஒரு வேலைக்காரி வரும்வரையில் இவளை விட்டுவிடக் கூடாது என்று எண்ணியே செங்கம்மா தன் கோபத்தைக் கூடுமான வரையில் அடக்கிக் கொண்டு கண்டிப்பான குரலில், ''இந்த மாதிரி எல்லாம் நீ கோபத்தோடு பேசுவதற்கு இங்கு அவசியமே இல்லை. இந்த அறையில் படுப்பதற்குக் கொஞ்சம் அசௌகர்யமாக இருந்தால், காற்று வசதி இல்லாவிட்டால் ஒரு விசிறி தருகிறேன், வைத்துக்கொள். எஜமானி அம்மா இந்த அறையைத்தான் உனக்குக் கொடுக்கச் சொன்னாங்க. சரி, வா! சமையலறைக்குப் போவோம். கொஞ்சம் வேலை இருக்கிறது'' என்றாள். (தொடரும்)



மனைவி:—என் தம்பி வந்து ஆறு மாதமாகப் போகிறதே, நீங்கள் அவனுக்கு இதுவரையில் ஏதாவது வாங்கிக் கொடுத்தீர்களா?

கணவன்:—நானா தரமாட்டேன் என்கிறேன்? அவன் வந்த மறுநாள் முதலே நான்தான் அவனுக்குத் திரும்பிப் போவதற்கு டிக்கெட் வாங்கித் தருகிறேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறேனே!



# நரை மயிருக்கு விடைகொடுத்து விடுங்கள்

[illegible]

Pearline Paris Ltd. P. O. Box 493, Bombay.

## ஹென்னல்

நிரந்தரமாக நரையை நீக்குகிறது



## ஆஸ்துமா, மார்ச்சளி இருமல், மூச்சுத் திணறல், மூன்றே நிமிஷத்தில் அகற்றப்படுகின்றன

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதிப்படுகிறீர்களா! அதிகமாக இருமுவதால் பிராணவஸ்தையாக இருக்கிறதா! பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், குளுமையான வஸ்துக்களையும் சிற்சில உணவுகளையும் உட்கொள்ள முடியவில்லையா!

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ ஓர் புதிய நம்பிக்கையை அளிக்கும். மயக்க மருந்து, புகை பிடித்தல், இஞ்சக்ஷன், ஆட்டோமைஸர் இவை தேவையில்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின்போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக அகன்றுவிடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி, கபத்தைக் கரைத்து சிரமமின்றி ஸ்வாசத்தை அபிவிருத்தி செய்து முதல்நாள் இரவிலேயே நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 ஆண்டுகளாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமன்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக மிஸ்டர் ஜே. ஆர். இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து இறந்துவிடுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மெண்டாகோ ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்தி விட்டது. இரண்டு வருஷங்களில் அத்தொந்தரவே அவருக்கு மீண்டும் ஏற்படவில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ முதல் வேளை சாப்பிட்டதுமே நேரடியாக இரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் கீழ் மெண்டாகோ உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்று, திருப்தி யளிக்காவிடில் காலிப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறு நாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்கு நல்ல பாதுகாப்பை அளிக்கிறது.

**Mendaco**

மெண்டாகோ

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை அறவே அகற்றுகின்றது

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரஸ்வாமி**

## 62. க்ஷயம்

மனிதன் ஆகாரமில்லாமல் சில மாதங்கள் இருக்க முடியும். ஜலம் அருந்தாமல் சிலநாட்கள் இருக்க முடியும். ஆனால் காற்றில்லாமல் சில நிமிஷங்கள் கூட மனிதனால் உயிர்வாழ முடியாது. அப்படி மனித வாழ்க்கைக்கே ஜீவாதாரமான காற்றை இழுத்து நிரப்பும் காற்றுப்பைகளாகிய நுரையீரலைத் தாக்கும் நோய்தான் க்ஷயம் என்பது. இவ்வியாதி மிகப் பயங்கரமானது. க்ஷயத்திலும் பலவிதம் இருக்கின்றன. முக்கியமாய் இவ்வியாதி நுரை ஈரல்களில்தான் பிடிக்கும் என்றாலும், மற்ற பாகங்களுக்கும் வருவதுண்டு. நுரை ஈரல்களில் காற்றின் மூலமாகத் தொற்றலாம். மற்ற பாகங்களில் சாப்பிடும் உணவு, ஜலம், பாத்திரம் முதலியவற்றினால் தொற்றலாம். அல்லது முதலில் நுரை ஈரல்களில் வந்து, ரத்த மூலமாக வேறு இடங்களுக்கும் தொற்றலாம். சரீரத்தில் இந்த வியாதி வர முடியாத இடமே கிடையாது எனலாம். சிலருக்கு நுரை ஈரல்களில் அந்த வியாதி வந்து பல பாகங்களைச் சாப்பிட்டுவிடும். சிலருக்கு எலும்புகளில் வந்து எலும்பையே சாப்பிட்டுவிடும். சிலருக்குப் பூட்டுகளில் வரும். சிலருக்கு மார்பு எலும்புகள் பல மறைந்துவிடும். சிலருக்கு முதுகெலும்புகள் குறைந்துவிடும். சிலருக்கு இருதயத்தைப் பிடிக்கும். மூத்திரக் காய்களில் தங்கி சேஷ்டை செய்யும். குடல்களில் வந்து குடிகொள்ளும். ஈரலில் தோற்றும். சிலருக்கு மூளையிலும் தொற்றுகிறது. இம்மாதிரி சர்வ வியாபகமாய் இந்த நோய் இருக்கிறது.

எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தால்தான் க்ஷயம் எங்கெங்கு பிடிக்கப்பட்டிருக்கிறது என்பது தெரியும். இவ்வியாதிக் கிருமிகள் உள் நுழைந்தும் தன் காரியமாகிய வம்சாபிவிருத்திக்கு ஏற்ற இடம் தேடிக்கொண்டு குடி புகுந்துகொள்ளும். உடல் உறுதியாய் இருந்து ரத்தத்திலுள்ள வியாதிகளை எதிர்க்கும் கிருமிகள் போதிய பலம் பொருந்தியதாய் இல்லாவிட்டால் க்ஷயக் கிருமிகளுடன் நடக்கும் போரில் அவைகள் தோல்வி அடைந்துவிடும். பிறகு இந்த க்ஷயரோகக் கிருமிகள் சௌகரியமான இடத்தில் தங்கிக் கூடாரம் அடித்துக்கொண்டு தன் வம்சத்தை விருத்தி செய்யத் தொடங்கிவிடும். அதற்கும் உணவு வேண்டுமல்லவா? அவை ரேஷனை எதிர்பார்க்காது தன் இஷ்டமாய், வேண்டுமளவு திருப்தியாய் தான் தங்கி இருக்கும் பாகத்தைக் கபளீகரிக்க ஆரம்பித்து விடும். இதற்குத்தான் க்ஷயம் (குறைவு) என்பது.

இந்த க்ஷயக் கிருமிகளும் பிராணவாயு எட்டிப் பார்க்காத பாகங்களில்தான் வாசம் செய்யும். பிராண வாயுதான் அதற்குச் சத்துரு. பிராண வாயு பட்டால் அது நசித்து விடும். அதற்குத் தகுந்தாற்போல் தற்கால நாகரிகத்தாலோ, அவசர வாழ்வினாலோ அநேகருக்கு முதுகு கூன் தள்ளி நுரை ஈரல் எங்கேயோ பொந்துக்குள் அடைபட்டிருப்பது போல் இருக்கிறது. அநேகருக்கு மார்பெலும்பு குறுகி, மேடாய்க் கோபுரம்போல் எழும்பி, நுரைஈரல் குறுகிச் சிறைப் பட்டதைப் போல் இருக்கிறது. இத்தகையவர்களிடம் க்ஷயக் கிருமிகள் உள் நுழைந்தால் அவைகளுக்கு நல்ல வேட்டைதான்.

இதனால் பாதிக்கப் பட்டவர்கள் க்ஷயத்தினால் தாம் பாதிக்கப் பட்டதாக நினைக்க மாட்டார்கள். ஜுரம் அடிக்கடி வரும். சிலருக்கு மாலை நேரங்களில் லேசாய் ஜுரமடிக்கும். லேசாய் இருமுவார்கள். சரி, ஏதோ உஷ்ணத்தினாலோ, ஜல தோஷத்தினாலோ இருமல் இருக்கலாம் என்று முதலில் அதற்கான மருந்துகளைச் சாப்பிடுவார்கள். பிறகு சளியுடன்கூட இருமல் வரும். இவைகளெல்லாம் க்ஷய அபிவிர்த்திக்கு அடையாளம். இருமினால் சளி கட்டி கட்டியாக வரும். முதலில் வெள்ளையாக இருக்கும். நாளுக்கு நாள் மஞ்சள் நிறமாக மாறும். ஒரு நாளில் நான்கு அவுன்ஸ், ஆறு அவுன்ஸ் சளியைக்கூட இருமி இருமி எடுப்பாரும் உண்டு. இது மிக அபாயகரமானது. இத்தவிதமான வியாதிக் கொடுமையிலிருந்து மீளப் போதிய தற்காப்பு முறைகளைக் கைக் கொள்ள வேண்டும். இவர்கள் என்னதான் சாப்பிட்டாலும் தேகத்தில் ஒட்டாது. இவர்களின் சக்தியை யெல்லாம் இந்த வியாதியே கொள்ளை கொண்டு விடும். பிராணவாயுவே சரியாய்க் கிடைக்காத போது ஒருவன் பூரண மனிதனாய் -எப்படி உலாவ முடியும்! இந்த நிலைமையிலுள்ளவர்கள் எந்த வேலைக்குமே லாயக் கற்றவர்களாகி விடுவார்கள். அவர்களின் கவலையே அவர்களை அடையாளம் தெரியாமல் மாற்றி விடும். சிலருக்கு ஒரு நுரை ஈரலையே சாப்பிட்டு விட்டு மறுபக்கம் பரவும். சிலருக்கு ஒரே சமயத்தில் இரு நுரை ஈரல்களிலும் பரவுவதுண்டு. மூச்சு சரியாய் விட முடியாது. மார்பு (நுரை



"அரை வருஷப் பரீக்ஷை நீ தேறினால் உனக்கு ஸைக்கிள் வாங்கித் தருவதாக அப்பா சொன்னாரென்று சொன்னாயே!"

"ஆமாம்."

"நீயோ தேறவில்லை. நன்றாகப் படித்திருக்கக் கூடாதா? இத்தனை நாளும் என்னதான் செய்தாய்?"

"ஸைக்கிள் விடக் கற்றுக் கொண்டிருந்தேன்."

சரல்களில்) வலி எடுக்கும். ஆயாசம் ஏற்படும். சுறுசுறுப் பிருக்காது. எதிலும் ஒரு சலிப்பு ஏற்படும். இந்த நிலைமையில் டாக்டரிடம் சென்றால் எக்ஸ்ரே எடுக்க வேண்டு மென்பார். முடிந்தவர்கள், சக்தியுள்ளவர்கள் எக்ஸ்ரே எடுத்துப் பார்ப்பார்கள். முடியாதவர்களில் எத்தனை பேருக்குச் சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் சௌகரியம் கிடைக்கப் போகிறது!

இதற்குச் சிகிச்சை பலவிதம் உண்டு. உள்ளுக்கு மருந்து சாப்பிடுவதில் பலவிதம். ஊசி மூலம் ஏற்றும் மருந்துகள் பலவிதம். இன்னும் பல ஆராய்ச்சிகள் நடந்துகொண் டிருக்கின்றன. பல புதிய மருந்துகள் வந்த வண்ணமாய் இருக்கின்றன. இவைகளில் ஏழை முதல் பணக்காரர்கள் வரை உபயோகிக்கும் மருந்துகளும் உண்டு. ஆனால் நோய்களுக்கு எல்லோரும் சமத்துவ மல்லவா! அதிலும் இந்த நோய் ஏழை என்றும், பணக்காரனென்றும் பாரபட்சம் பார்க்குமா என்ன! ஏழைக்குச் சரியான உணவு, போஷணை இல்லாமையால் க்ஷயம் பிடிக்கிறது. பணக்காரனுக்கு, உடல் உழைப்பு இல்லாததால் க்ஷயம் பிடிக்கிறது.

இவைகளுக்கு ஸ்ரெப்டோமைஸின், ஏ. பி. மற்றும் பலவித மருந்துகளை ஊசி மூலம் ஏற்றுவார்கள். நல்ல சத்துள்ள ஆகாரத்தைச் சாப்பிட வேண்டும். விசேஷமாக தங்கத்தால் செய்த மருந்துதான் இதற்குக் குணமளிப்பதாகத் தெரிகிறது. ஏழைகளுக்கு இவை எங்கு கிடைக்கப் போகிறது! இப்பொழுது இதன் தடுப்புக்காக பி. ஸி. ஜி. ஊசியைக் குத்திக் கொள்ள வேண்டும் என்று சொல்லி வருகிறார்கள்.

இது தவிர பிராணவாயுவை ஊசி மூலம் நுரைசரலுக்கே ஏற்றுகிறார்கள். மூக்கின் வழியே காற்றுக் குழாய்களின் மூலமாய், க்ஷயம் பாதித்த இடத்திற்குப் பிராணவாயு போக முடியாத போது இப்படிச் செய்வார்கள். சிலருக்கு அந்த வியாதி அதிகம் பரவாமலிருப்பதற்காகச் சில காற்று நரம்புகளைத் துண்டித்து விடுவார்கள். மார்பை மேல் தூக்கி மத்ஸ்யாசன நிலைமையில் படுக்க வைத்து, அப்படியே பிளாஸ்டரைப் போட்டுக் கட்டி வைப்பார்கள். இவ்வாறு பலவித சிகிச்சைகள், பல மாதங்கள், ஏன் சில வருடங்கள்கூட செய்து குணமாகிறது. குணமானவர்கள் கடினவேலைகளைச் செய்ய முடியாது. அப்படி யிருந்தாலும் இவ்வியாதி மறுபடியும் அவர்களை அணுகாது என்று சொல்லுவதற்கில்லை. அந்த வியாதி வராமல் இருக்க என்ன செய்ய வேண்டுமென்று டாக்டர்களைக் கேட்டால், சில மருந்துகளை எழுதிக் கொடுத்து, அதைச் சாப்பிட்டுக்கொண்டே வரச் சொல்லுவார்கள். சாப்பிடும் வரை குணம் தெரியும். ஆனால் அவனும் மனிதன் தானே! எப்பொழுதும் சதா மருந்துபுட்டியுடன் வர அவனுக்குப் பிடிக்குமா என்ன! மருந்தைக் கண்டால் வெறுப் பேற்படுகிறது. மருந்துகளைச் சாப்பிடுவதைச் சிறிது கைவிட்டாலும் மறுபடி நோய் வருகிறது. சிலருக்கு மருந்துகளை சாப்பிட்டுக் கொண்டிருந்தாலும் வியாதி வரலாம்.

இத்தனைக்கும் மேலாக மற்றொருவித க்ஷயம் இருக்கிறது. 'காலப்பிங் டி. பி.' என்று சொல்லுவார்கள். இந்தக் காலத்தில் வாழ்க்கையே 'காலப்' அதாவது பாய்ச்சல் வேகத்தில்தான் நடைபெறுகிறது. அதற்குத் தகுந்தாற்போல் வியாதிகளும் வருகின்றன. பெயரும் அம்மாதிரி வைக்கிறார்கள். இந்தப் பாய்ச்சல் க்ஷயம் தாக்கின பத்து, பதினைந்து நாட்களுக்குள் ஆளை தீர்த்து விடுவான். இந்த குறைந்த நாட்களுக்குள் இந்த வியாதிதான்



திருடன் (கான்ஸ்டபிளைப் பார்த்து):—ஐயா, கொஞ்சம் பெரிய மனசு பண்ணி ஒரு ஐந்து நிமிஷம் அவகாசம் கொடுங்கள். என் தாயாரிடம் ஒருவார்த்தை சொல்லிவிட்டு ஓட்டமாய் ஓடிவந்து விடுகிறேன்!

கான்ஸ்டபிள்:—என்னை முட்டாள் என்று நினைத்தாயா? என்னை அப்படியெல்லாம் ஏமாற்ற முடியாது. நீ இந்த இடத்திலேயே இரு. உன் வீட்டு விலாசம் சொல்லு. நான் போய்ச் சமாசாரத்தை உன் அம்மாவிடம் சொல்லிவிட்டு ஓட்டமாக ஓடிவந்து விடுகிறேன்!

என்று கண்டு பிடித்து அதற்குச் சிகிச்சை அளிப்ப தென்பது இயலாத காரியம்.

எலும்புகளில், பூட்டுக்களில் பிடிக்கும் க்ஷயத்திற்கு 'பாரிஸ் பிளாஸ்டர்' போட்டுக் கட்டி விடுவார்கள். அவர்கள் படுக்கையில்தான் இருக்க வேண்டும். அந்தப் பக்கம் இந்தப் பக்கம் திரும்ப முடியாது. நல்ல சத்துள்ள உணவுகளைச் சாப்பிட வேண்டும். கால்ஷியம் மற்றும் பல ஊசிகளைப் போடுவார்கள். முதல் கட்டு ஆறு மாதங்கள், பிறகு எட்டு மாதங்கள் என்று பல கட்டுகள் வளர்ந்து கொண்டே போகும். வியாதி என்னமோ மிக சாவகாசமாய்த்தான் குணமாகும். டாக்டர்கள்தான் என்ன செய்ய முடியும்! அழிந்து போன எலும்பைச் சிருஷ்டிக்க முடியுமா! சத்துள்ள ஆகாரத்தினாலும், கால்ஷியத்தினாலும்தான் எலும்பு வலுவடையச் செய்ய வேண்டும்.

மற்றும் மண்ணீரல், மூத்திரப்பை, குடல்கள், மூளை முதலிய இடங்களில் க்ஷயம் வந்தால் அவ்வளவுதான். மனிதன் பூரண ஆயுளுடன் சுகமாய் இருக்க முடியா தென்பது நிச்சயம். மருந்துகளின் உதவியுடன் வேண்டுமானால் சில காலம் உயிரைப் பிடித்து வைத்திருக்கலாம்.

ஆனால் இத்துன்பங்கள் அத்தனைக்கும் யோகாசனம் ஒரு அரிய சஞ்சீவியாய் இருக்கிறது. இம்மாதிரி வியாதிகள் வராமல் தடுப்பதுடன், வந்தால் அதிகமாகாமல் நிச்சயமாய்த் தடுக்கும். பிறகு நாளுக்கு நாள் நோய் குறைந்து குணமாகும். அதற்கு இந்த மத்ஸ்யாசனத்தோடு அவரவர்களின் நிலைமைக்குத் தகுந்தபடி மற்றும் சில ஆசனங்களும், மூச்சுப் பயிற்சிகளும் செய்து வந்தால் அத்தகைய கொடூரமான வியாதி நம்மை வந்து அணுகாமல் தடுக்கலாம்.

ஆசனப் பயிற்சியைத் தினம் தவறாமல் செய்து வந்தால் எல்லாவிதமான வியாதிகளிலிருந்தும் தப்புவதுடன் நல்ல தேகத்துடனும் மனோபலத்துடனும் நிச்சயமாக வாழலாம். வைத்தியர்களின் உதவி இல்லாமல், பணச் செலவு இல்லாமல் ஆரோக்கியமாக வாழலாம். (தொடரும்)




டாக்டர்கள் இந்த அற்புதமான
பெப்ஸை சிபார்சு செய்கிறார்கள்

இருமல், ஜலதோஷம், குளிர், தொண்டைப்புண்,
இன்புளுயன்ஸா, சளி ஜுரம், மார்வலி, சுவாச
கோச நோய்கள் முதலியவற்றிற்கு உகந்தது.



தொண்டைப் புண் ஆபத்தைத் தரும் விஷக் கிருமிகளை உற்பத்தி செய்கிறது. அவை இருதயத்தையும் சுவாச கோசத்தையும் தாக்குகின்றன. உடனே பெப்ஸ் மாத்திரைகளை மெல்லுங்கள். பெப்ஸ் விரைவில் உங்கள் தொண்டைக்கு இதம் தந்து கிருமிகளைக் கொன்றுவிடுகிறது. பெப்ஸ உங்கள் தொண்டையிலும் மார்பிலும் உள்ள எரிச்சலையும் ரணத்தையும் குணமாக்குகிறது. பெப்ஸ் மூச்சு விடுவதைச் சுலபமாக்குகிறது. பெப்ஸிலிருக்கும் மருந்துச் சத்து உங்கள் தொண்டைக்குள் சென்று சுவாசக் குழாய்கள் வழியாக சுவாச கோசத்தை அடைகிறது. அதனால்தான் பெப்ஸ் அற்புத மருந்தாக விளங்குகின்றது.

பெப்ஸ் தொண்டைப் புண், மார்வலி நோய் நிவாரண மாத்திரைகள்

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி., மதராஸ்

FPY 1

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு**

## S. S. "ரஜூலா"

**சென்னை புறப்படும் தேதி — 1951 டிஸம்பர் 24உ**
**நாகப்பட்டினம் புறப்படும் தேதி — 1951 டிஸம்பர் 25உ**

கப்பல் புறப்படும் தேதி காலை 6 மணிக்கு மேல் சாமான்கள் ஏற்றப்படமாட்டா.

கப்பலேறுவதற்கான ஏற்பாடுகள்:

சென்னையிலிருந்து 24-12-51: *பெர்த் வசதியற்ற பிரயாணிகள் காலை 8-30 மணிக்கும் ஏனையோர் பிரயாணிகள் வைத்திய பரிசோதனைக்கும், கப்பலில் ஏறுவதற்கும் பகல் 12 மணி முதல் பகல் 1 மணிக்கு மேற்படாமல் வந்துவிட வேண்டும்.*

நாகப்பட்டினத்திலிருந்து 25-12-51: *பெர்த் வசதியற்ற டிக்கட்டுள்ளோர் காலை 6 மணிக்கும் ஏனையோர் டிக்கெட் உள்ளவர்கள் 8 மணிக்கும் கப்பலேறலாம்.*

*சென்னையில் ஏறும் பிரயாணிகள் 24-12-51 பகல் 1 மணிக்கு மேல் வந்தால் வைத்திய பரிசோதனைக்கு தாமதமாகிவிடும். ஆகையால் அவர்கள் கப்பலேற முடியாது.*

*பினாங்கு, துறைமுக சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டியிருப்பதால் எல்லா பிரயாணிகளும் சர்வதேச சுகாதார விதிகளின்படி அமைந்த பாரத்தில் அம்மை குத்தியதற்கான சர்டிபிகேட்டும், காலரா எதிர்ப்பு இஞ்ஜெக்ஷன் செய்ததற்கான சர்டிபிகேட்டும் பெற்று, ஒரு சர்க்கார் அல்லது முனிஸிபல் ஹெல்த் ஆபீஸரின் அத்தாட்சியுடன் செல்லுபடியாகக் கூடிய நிலையில் கொண்டுவர வேண்டும்.*

| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி லிமிடெட் |
|---|---|
| 7, அரமனைக்காரத் தெரு, மதராஸ் | முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம் |

# அமுதங்களுக்கு ஏற்ற அமுது

மார்ட்டன் மிட்டாய்களைத் தவிர அவர்களுக்குக் கொடுப்பதற்குச் சிறந்தது வேறொன்றும் கிடையாது.



# MORTON

ஓர் அத்யாவசியமானது குழந்தைகளுக்கு ஓர் இன்பம் யாவர்க்குமே.

ஸி. & இ. மார்ட்டன் (இந்தியா) லிட்.

# கொசுவைக் கொல்லுங்கள்

## — அது மலேரியா, விட்டு விட்டு விசும் ஜுரம், டிங்கு ஜுரம் முதலிய நோய்க் கிருமிகளை ஏற்றிச் செல்கிறது



கொசு தேங்கி நிற்கும் ஜலத்தில்தான் முட்டையிட்டு விருத்தியாகிறது. முட்டையிலிருந்து பூரண வளர்ச்சிபெற 8 நாளாகும். 8 நாள் தொடர்ந்து ஜலம் தேங்கியிருக்கும் எந்த இடத்திலும் கொசுக்கள் தாராளமாக உற்பத்தியாகக்கூடும்.

கொசு உங்கள் உயிருக்கு நிரந்தர ஆபத்தை விளைவிக்கிறது, ஏனெனில் அது நோய்க் கிருமிகளை ஏற்றிச் செல்கிறது. அக் கிருமிகளுள் மலேரியா ஒன்றே நமது நாட்டில் ஒவ்வொரு வருஷமும் 10 லக்ஷம் உயிர்களை பலி வாங்குகிறது.

ஞாபகமிருக்கட்டும்: ப்ளிட்டிலடங்கிய 5 கொடிய டோக்ஸின்கள் கொசுக்களையும் மற்ற எல்லாப் பூச்சிகளையும் துரிதமாகவும் நிச்சயமாகவும் கொல்லுகின்றன.

கொசு உங்களிடையே கொசுவைப் பார்த்ததும் அதைக் கொல்லுங்கள்.




ஸ்டாண்டர்ட் வாகுவம் ஆயில் கம்பெனி

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

## நளினி *கிப்ஸ்* உபயோகிக்கிறாள்—அவள் பற்கள் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன.



நளினி கிப்ஸ் டென்டிபிரிஸை விரும்புகிறாள். அவள் சிறுவயதிலிருந்தே அதை உபயோகித்து வருகிறாள்.



காலையிலும் மாலையிலும் எல்லா பற்களையும் கிப்ஸினால் தேய்க்கிறாள். மேலும் கீழுமாக, ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கமாக அல்ல.



அவள் பற்கள் பிரகாசமாகவும் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன. அது கிப்ஸ் டென்டிபிரிஸினால் தான்!

## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா ?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர காரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கேடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புது மணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ் டென்டிபிரிஸ்

ஒழுங்கானமுறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது

விஜயோ சொற்பனம்—பலநாட்கள் நடித்துவரும்

GD. 30-172 TM

# விசைச் சக்தியின் வேகம்



நீங்களும் பெறுக



# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிரமமான வேலை நிலையிலும், களைக்காது உணர்ச்சியிருக்கும் போதுதான் நீங்கள் திடமான ஆரோக்யம் உள்ளவரென்பதைக் குறிக்கும். களைக்காத உணர்ச்சி பெறுவதற்கு, பிரதி தினமும் போஜனத்தின் அங்கமாக வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதைத்தவிர சிறந்ததொன்றுமில்லை. தேக வளர்ச்சியூட்டுவதற்கு அத்யாவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட், வேலை செய்வதற்கான திராணியை பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் இதர நிலைமைகளுக்கு இடம் கொடாதபடி தேகத்திற்கு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கச் செய்யும்.

உங்கள் குடும்பம் முழுவதற்கும் இப்பொழுதே வாங்கி விடுங்கள்




# WATERBURY'S COMPOUND

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் தென்புடன் வைத்திருக்கும்

NAS 738

## "எனது கைகளை உபயோகிப்பதே மிக சிரமமாயிருந்தது" — பிறகு "க்ருஷன்" வழியைப் பின்பற்றியதால்



# கீல்வாதத்தினின்றும் விடுபட்டேன்



ஒரு காலத்தில் இவர் கீல்வாதத்தினுல் மிகவும் அவஸ்தைப் பட்டார். பிறகு அதைத் தடுக்கும் முறையை அறிந்ததிலிருந்து பல வருஷங்களாக அதிலிருந்து விடுதலை பெற்றுள்ளார். நம்பகமானதும், அவசியம் தெரிந்திருக்க வேண்டியதுமான ஒரு சிகிச்சை அது; அவரது கடிதத்தைப் படியுங்கள் :—

"பிரதி குளிர்காலத்திலும் எனது தோள்களில் மிகுந்த வலிகாரணமாகக் கைகளை உபயோகிப்பதே சிரமமாயிருந்தது. ஐந்து வருஷங்களுக்கு முன்னர், "க்ருஷன்" உப்புக்கள் உபயோகித்துப் பார்த்ததில் ஒரு வாரத்தில் நல்ல குணம் கண்டதுமன்றி மெத்த ஆறுதலும் அடைந்தேன். ஒரு மாதத்தில் வலி முழுவதும் மறைந்ததுமல்லாமல் நல்ல ஆரோக்கியமும், புத்துயிர் பெற்ற யௌவன உணர்ச்சியும் பெற்றிருப்பதாக உணர்ந்தேன். ஒருவர் சாதாரணமாக நினைப்பதுபோல், இந்த யௌவன உணர்ச்சி தற்காலிகமானதாக அல்லாமல் நிரந்தரமாகவே இருந்தது." — C. A., Poona.

கீல் வாதத்தின் வலிகளும், விறைப்பும் சாதாரணமாக தேகத்திலுள்ள அபரிமிதமான மூத்திர அமிலங்களால் உண்டாக்கப்படுகின்றன. "க்ருஷனில்" உள்ள ஆறுவித உப்புக்கள் ஈரலையும், மூத்திரக்காய்களையும், நன்கு வேலை செய்யுமாறு தூண்டுவதுடன் உபத்திரவங்களுக்குக் காரணமான அதிகப்படி மூத்திர அமிலங்களை உடலிலிருந்து வெளியேற்றவும் உதவுகிறது. தினந்தோறும் உட்கொள்ளும் "சிறு அளவு" க்ருஷன், கழிவு பதார்த்தங்கள் உடலில் தங்கிப் புளித்துப் போகாதவாறு குடல்களை நன்கு இயங்குமாறு செய்வதனுல் மூத்திர அமிலங்கள் ஒரு போதும் உடலில் தேங்கி நிற்க முடிவதில்லை. எல்லா கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.




Ad. KSID. 16.

# இரட்டிப்பு ஆகாரம்



குழந்தையின் வளர்ச்சி அவனுடைய ஆயுட்காலம் பூராவும் இருக்கும் திரேகத்தின் அமைப்பை ஸ்தாபிக்கின்றது. அதனால்தான் ஓர் தாயானவள், எந்த ஆகாரங்கள் குழந்தை பிறப்பதற்கு முன்னும் மற்றும் அவனுக்குப் பாலூட்டி வரும்பொழுதும் குழந்தைக்குத் திடகாத்திர வளர்ச்சியைக் கொடுக்குமோ அந்த ஆகாரங்களை முக்கியமாகச் சாப்பிடவேண்டும். தற்சமயம் கிடைக்கும் உணவுப்பொருள்களில், உடல்வளர்ச்சிக்கு அத்தியாவசியமான விடமின்கள் விசேஷமாகக் குறைந்திருக்கின்றன. ஆதலால், ஓர் தாய் அதிகப்படியான விடமின்களை உட்கொள்ளாவிடில், அவளுடைய குழந்தை நோஞ்சலாகப் பிறந்து அதைப் பராமரிப்பதற்கு மிகச் சிரமமாக இருக்கும். எம். ஜி. பி. (மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட்) ஷார்க் லிவர் ஆயிலில் ஓர் ஆளின் நித்திய தேவைக்கு அத்தியாவசியமான பூர்ண அளவு A & D விடமின்கள் நாளொன்றுக்கு ¼ அணா செலவில் கிடைக்கும் ஓர் குழந்தைக்கு ¼ அணா செலவில் நித்தியமும் தேவையாயுள்ள இந்தப் பாதுகாப்புச் சத்துப்பொருள்கள் கிடைக்கும்.

மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட்




ஷார்க் லிவர் ஆயில்

ஒரு ஆளுக்குச் செலவு : நாளொன்றுக்கு ¼ அணா.

**அடமின்**

மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட் ஷார்க் லிவர் ஆயிலிலுள்ள கொழுப்புகள், மென்மையான ஜீரண சக்தியுடைய சமீபத்தில் பிறந்த சிசுக்களின் ஜீரணத்தைச் சிறிது பாதிக்கலாம். அப்படியானால், முழு சாரமுள்ள அடமின் கொடுக்கவும். தினம் சில துளிகளே தேவை; அது எவ்விதமான தொந்தரவும் கொடுக்காது.

- விடமின் 'A' :— உடல் வளர்ச்சிக்கும் வலிமைக்கும் சாதகமானது. ஜலதோஷம், சின்னம்மை, நீர்க்கொள்ளுவான், கை நீர்க்கட்டி முதலிய நோய்களைத் தடுத்து—வெட்டுக்காயம் பிளவுபட்டகாயம் இவைகளினின்று விஷம் பரவாமல் பாதுகாக்கின்றது.
- விடமின் 'D' :— கணைச்சூட்டைத் தவிர்க்கிறது. உறுதியான எலும்பு, பற்கள் வளர்ச்சிக்கும் ரத்தத்துக்கும் இன்றியமையாதது.

கொழுப்புகள் :— விடமின்களை பூர்ணமாய் ஜீரணிக்கத் தேவையானதும், அதிகப்படி சக்தியை கொடுப்பதற்காகவும் வேண்டிய அளவு கடலை எண்ணெய் உள்ளது.

தயாரிப்பாளர்கள் :—

**கவர்மெண்ட் ஆயில் பாக்டரி, கள்ளிக்கோட்டை**

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் & காமெர்ஸ்

**கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

தென் இந்தியாவுக்கு வினியோகஸ்தர்கள்

பாரி & கோ., லிட்., மெட்ராஸ்.

MTA'S-GO 5 B—TAMIL

For healthy Skin

insist on




MARGO

SOAP

THE GENUINE NEEM OIL SOAP

A Calchemico PRODUCT

மதராஸ் ஆபீஸ்:

5/149, பிராட்வே

ஜி. டி., மதராஸ்





'கோலினஸ் புன்னகையில் வசீகரம் இருக்கிறது!

நுரை தான் இந்த

விந்தையாற்றலுக்குக் காரணம்



இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:—

ஜியோப்ரே மானர்ஸ் & கோ. லிட்., பம்பாய் 1

கிளைகள்:-கல்கத்தா - மதராஸ் - டில்லி.



எப்படித்தான்
மலேரியா என் குழந்தையை
பயமுறுத்தியது !

'பாலுட்ரின்' தான்
அவளைக் காப்பாற்றிக்
கொடுத்தது ...

என் குழந்தையை அவளது மாமன் ஊருக்கு அழைத்துக்கொண்டு போகாமலிருந்திருக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன். அவள் மீண்டும் பள்ளிக்குச் செல்லவேண்டிய தினத்தன்று மலேரியாவில் படுத்துக்கொண்டாள். விரைவில் பலவீனமடைந்து நோஞ்சலாய்ப் போனாள். பயங்கரமான ஜுரத்துடன் அவளுக்கு எப்படித்தான் நடுக்கல் வந்தது தெரியுமா? அதை நிறுத்தவே முடியவில்லை. பிறகு ஒரு நண்பரின் யோசனைப்படி தினமும் ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை கொடுத்துவரத் தொடங்கினோம் மூன்று அல்லது நாலு நாட்களில் ஜுரம் விட்டுவிட்டது. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு நாங்கள் எல்லோருமே பிரதி ஞாயிற்றுக்கிழமையும் சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை உட்கொண்டு வருகிறோம். குடும்பத்திலே யாருக்கும் மலேரியா இல்லை.






**பாலுட்ரின்***
டிரேட் மார்க்

மலேரியாவுக்கு ஓர் அற்புதமான மருந்து

* அணுவுக்கு ஒரு வில்லை

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்



உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...




ஒரு தனவந்தர்கூட, தினமும் ப்ளூ ஜில்லெட் பிளேடை உபயோகிக்கும் சாதாரண மனிதனைவிட ஆனந்தமான க்ஷவரத்தை அனுபவிக்க முடியாது. மிகவும் கூராக தீட்டப்பட்ட இதன் விளிம்புகள் வழவழப்பான, சுகபோக க்ஷவரத்தை உங்களுக்கு அளிக்கிறது. மின்சாரத்தால் பதப் படுத்தப்பட்டதும், பிரத்தியேகமாக வலுவாக்கப்பட்டதுமான இந்த எஃகு பிளேடுகளால் அதிக தடவைகள் க்ஷவரம் செய்து கொள்ளலாம். விலை மிகவும் சரசமாயிருப்பதால், ஒவ்வொரு மனிதனும் உலகில் மிகவும் நாகரீகமான மனிதர்களின் விரும்பத்தக்க கூட்டத்தில் சேரலாம்.

# ப்ளூ ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா



# அச்சூ!

அந்த ஜலதோஷத்தை
தகர்த்தெறிவது

'ஆஸ்ப்ரோ'



3 வில்லைகள் அணா 1½.
30 வில்லைகள் அணா 15.



கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றி யிருக்கும் அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கி யிருக்கிறார்

விலை அணா எட்டு
(தபால் செலவு தனி)

●

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0
(தபால் செலவு தனி)

●

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**

கீழ்ப்பாக்கம் :: சென்னை



# பைல் பீன்ஸ்

அவனுக்கு உற்சாகமும் வெற்றியும் அளித்தது.






களைப்பும், சோர்வும், நோயுமாக அவன் ஒரு படு தோல்வியாக விளங்கினான். அவனது அந்தியந்த நண்பர்கள் கூட அவனைப்பற்றி மதிப்பிழக்கலாயினர்.

பின்னர் அவன் மருந்து போர்டு அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை ஒழுங்காக உட்கொள்ளத் தொடங்கினான். இப்போது அவன் பரிபூர்ணமான ஆனந்தமும், உற்சாகமும் கூடியவனாகத் திகழுகிறான். வேலையிலும் சரி, விளையாட்டிலும் சரி இன்று அவன் ஒரு வெற்றி வீரனாக விளங்குகிறான். பைல் பீன்ஸ் உங்கள் சுகத்தைப் பாழாக்கும் மலச் சிக்கல், வயிற்று வலி, அசதி முதலிய நோய்களைக் குணப்படுத்துகிறது. பைல் பீன்ஸ் உங்களுக்கு உண்மையான சக்தியையும் சுகத்தையும் தருகிறது.



**மருந்து போர்டு அங்கீகாரம் பெற்ற இந்த அசல் பைல் பீன்ஸையே பார்த்து வாங்குங்கள்**

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?



உங்கள் பற்களையும், ஈறுகளையும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக் கொண்டு காப்பாற்றிக் கொள்ளுங்கள். அதில் சொரசொரப்பான பொருள் ஏதுமில்லை. மிருதுவாகவே உங்கள் பற்களை பளபளப்பான வெண்ணிறம் உண்டாகும்படி சுத்தம் செய்யும். வாயில் ஊறும் அபாயகரமான புளிப்பு நீர்களைக் கரைத்து பல்சொத்தை பிடிப்பதைத் தடுக்கும்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை மிகச் சுத்தமானது. உபயோகிப்பதற்கு ஆனந்தமாயிருக்கும். அதனால் தான் உலகெங்குமுள்ள கோடிக்கணக்கான மக்கள் தினமும் இருதடவை தங்கள் பற்களை மக்ளீன்ஸினால் துலக்குகிறார்கள்.

...நான் எந்தப் பற்பசையை உபயோகிக்கிறேன் என்று இந்த வாரத்தில் என்னிடம் ஐந்து பேர் கேட்டார்கள். ஏனெனில் என் பற்கள் அத்தனை வெண்மையாயிருக்கின்றன...

## இன்றே மக்ளீன்ஸ் வாங்குக




MTY-5 TAM

வியாபார விவரங்களுக்கு: ஜெ. எல். மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

**மீண்டும் பாதி விலைக்கு குறைவான சலுகை!**
**15 நாட்களுக்கு மட்டும்**
புகழ் வாய்ந்த ஸ்விஸ் பாக்டரியில் தயாரித்த
கைக் கெடிகாரங்கள்.

ஒவ்வொன்றும் ஐந்து வருட
உத்திரவாதம் கொண்டவை.



| | ஒரிஜனல் விலை | தற்போது விலை |
|---|---|---|
| ஜெர்மன் பாக்கெட் வாட்ச் | 24/- | 11/- |
| ,, உயர் ரகம் | 28/- | 13/- |
| இங்கிலீஷ் அலாரம் டைம்பீஸ் | 40/- | 19/- |

No. 525 Size 6¾'''



| | | |
|---|---|---|
| 15 ஜுவல் ரோல்டு கோல்டு | 96/- | 45/- |
| 15 ஜுவல் 20 மைக்ரோன்ஸ் | 100/- | 48/- |

No. 526 Size 10½'''



| | | |
|---|---|---|
| 15 ஜுவல் ரோல்டு கோல்டு | 98/- | 48/- |
| 15 ஜுவல் 20 மைக்ரோன்ஸ் | 110/- | 52/- |

No. 527 Size 5¼'''



பிராஞ் ஷேப்

| | | |
|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் கேஸ் | 45/- | 22/- |
| 5 ஜுவல் ரோல்டு கோல்டு | 52/- | 25/- |

இரண்டு கடிகாரங்கள் ஆர்டர் செய்பவர்களுக்கு தபால் செலவு இலவசம்.

**PIONEER WATCH Co**
POST BOX NO 11428 CALCUTTA

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்!

•

எவ்வளவு நாட்பட்டதாயினும், மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான வீனஸ் சார்ம் வியாதியை மூற்றிலும் குணமாக்கி விடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொரி சிறங்கு ஆகிய இவைகளே இவ்வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். வீனஸ் சார்ம் ஆயிரக்கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறு தினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய காட்லாகிற்கு எழுதவும்

•

50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0
(தபாற் செலவு இலவசம்)

•

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K.M.)**
தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

## இக்கைகள் வேகமாக வேலை செய்கின்றன, ஆனால்...

## ...வேகமாக வேலை செய்யும் கைகளும் அழுக்கடைகின்றன!

அழுக்கடைந்த கைகள்
**மறைந்திருக்கும்**
**அபாயத்தைத்**
தாங்குகின்றன!

அழுக்கில் கண்களுக்கு
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!

லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்




# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது!

L. 184-50 TM